**4.1.60** தி$^{3}$க்பூர்வபதான்ஙீப்

திசையைக் குறிக்குஞ் சொல் முதலுறுப்பினராக அமைந்து நிற்கும் ஒரு பிராதிபதிகத்தோடு, 'ஙீப்' ஒட்டு பெண்பாலைக் குறிக்க வரும்.

**4.1.61** வாஹ:

'வாஹ்' இறுதியுறுப்பினராக நிற்கும் பிராதிபதிகத்தோடு பெண்பாலில் 'ஙீஷ்' வரும்.

தி$^{3}$த்யௌஹீ 'அரக்கனை நிலைநிறுத்துபவள்'

ப்ரஷ்டெ$^{2}$ளஹீ 'உழுவதற்குத் தயாரிக்கப்பட்ட (ஈனாத) பசு'

**4.1.62** ஸக்$^{2}$ய ஸி'ஸ்'வீதி ப$^{4}$ாஷாயாம்

ஸகீ$^{2}$, அஸிஸ்வீ ஆகியவைகள், பேச்சு வழக்கில் நிபாதனங்களாக அமையும். ஸகீ$^{2}$ரியம்மே ப்$^{3}$ராஹ்மணீ 'இந்தப் பிராமணத்தி எனது சினேகிதி' (ஸகி$^{2}$+ஙீஷ்) அ்'ஸிஸ்'வீ 'குழந்தையில்லாதவள்' (அ்'ஸிஸு$^{1}$+ஙீஷ்=ஈ) ஆனால், ஸக$^{2}$ாஸப்தபதீ ப$^{4}$வ அஸி1ஸு$^{1}$ (வேத மொழியில்)

**4.1.63** ஜாதேரஸ்த்ரீவிஷயாத$^{3}$ யோபத$^{4}$ாத்

எப்போதுமே பெண்பாலிலமையாத, ஈற்றயலில், 'ய' என்ற எழுத்தைக் கொள்ளாத, ஒரு இனத்தைக் குறிக்கும் சொல்லோடு 'ஙீஷ்' ஒட்டு பெண்பாலில் இணைக்கப்படும். குக்குடீ 'பெட்டைக் கோழி' ஸூகரீ 'பெண்பன்றி', மயூரீ 'பெண்மயில்' ஆனால் முண்ட$^{3}$ா – 'மொட்டை தலையுடைய' இது இனத்தைக் குறிக்குஞ் சொல்லல்ல, ஒரு குணத்தைக் குறிக்குஞ் சொல். ஆகையால், 'ஙீஷ்' வராது.

மக்ஷிகா – ஈ (எப்போதுமே பெண்பாலாக அமையுஞ் சொல்) க்ஷத்ரியா (ய–ஈற்றயலாக நிற்குஞ் சொல்)

வா: **யோபத$^{4}$ப்ரதிஷேதே$^{4}$** ஹயக$^{3}$வய முகய மத்ஸ்ய **மனுஷ்யாணாமப்ரதிஷேத$^{4}$:**

'ய'வை ஈற்றயலாகக் கொண்ட சொற்களுக்குச் சூத்திரத்தினால் விதிக்கப்பட்ட தடை கீழ்க்கண்ட சொற்களுக்குத் தடையாகாது. அதாவது, அச்சொற்களோடு 'ஙீஷ்' ஒட்டு பெண்பாலைக் குறிக்க வரும்.

| | | |
|---|---|---|
| ஹய | – | ஹயீ 'பெண்குதிரை' |
| க$^{3}$வய | – | க$^{3}$வயீ 'காட்டுப் பசு' |
| முகய | – | முகயீ 'ஒருவகை விலங்கு' |
| மத்ஸ்ய | – | மத்ஸீ 'மீன்' |
| மனுஷ்ய | – | மனுஷீ 'பெண்' |

**4.1.64** பாககர்ண பர்ணபுஷ்பப$^{2}$ல மூலபாலோத்தர பத$^{3}$ாச்ச 'பாக' முதலிய சொற்கள் இறுதியுறுப்பினராக நிற்கும் இனத்தைக் குறிக்கம் பிராதிபதிகங்களோடு 'ஙீஷ்' ஒட்டு பெண்பாலைக் குறிக்க வரும்.

ஒத$^{3}$னபாகீ
ஸ$^{1}$ங்குகர்ணீ
த$^{3}$ாஸீ ப$^{2}$லீ
த$^{3}$ர்ப$^{4}$மூலீ
கே$^{3}$ாப$^{3}$ாலீ
ஸ$^{1}$ாலபர்ணீ
இச்சொற்கள் பெண்பாலைக் குறிக்கும் சொற்களாக அமைவதால், இதற்கு முந்திய சூத்திரத்தோடு இவைகள் சேர்க்கப்படமாட்டா. ஆகையால் இவைகளைத் தனியாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆயினும், புஷ்ப, ப$^{2}$ல, மூல ஆகியவற்றை இறுதியுறுப்பினராகக் கொண்ட தொகையோடு 'ஙீஷ்' இணைக்கப்படாமலிருக்கும் சூழலில், அவைகள் 'அஜ' முதலிய வகுப்பைச் சேர்ந்ததாகக் கருதப்படும்.
ஸம்ப$^{2}$லா, அஜின ப$^{2}$லா, ஸத்புஷ்பா, காண்ட$^{3}$புஷ்பா, அமூலா.

**4.1.65** இதோ மனுஷ்யஜாதே:
மனித இனத்தைக் குறிக்கும் 'இ' யீற்றுப்பிராதிபதிகத்தின் பின் பெண்பாலைக் குறிக்க 'ஙீஷ்' ஒட்டு வரும்.
அவந்தீ 'அவந்தி தேசத்துப் பெண்'
குந்தீ 'குந்தி தேசத்துப் பெண்'
த$^{3}$ாக்ஷீ, ப்லாக்ஷீ ....
ஆனால் தித்திரி: (மனித இனமல்ல)

வா: இஞ் உபஸம்க்$^{2}$யானமஜாத்யர்த$^{2}$ம்
'இஞ்' என்ற தத்தித ஒட்டு ஈறாக நிற்கும், இனத்தைக் குறிக்காத சொற்களிலும் இவ்விதி பயன்படுத்தப்படும்.
ஸௌதங்க$^{3}$மீ
மௌனசிதீ

**4.1.66** ஊங்யுத:
மனித இனத்தைக் குறிக்கும் 'உ'வீற்றுப் பிராதிபதிகத்துக்குப்பின் பெண்பாலைக் குறிக்க 'ஊங்' ஒட்டு வரும்.
குரு: (குரு+ஊங்:ஊ) 'குரு தேசத்துப் பெண்' ப்$^{3}$ரஹ்மப$^{3}$ந்தூ$^{4}$:

வா: அப்ராணி ஜாதேஸ்$^{1}$ சாரஜ்ஜ்வாதீ$^{3}$னாமிதி வக்தவ்யம் ரஜ்ஜு (கயிறு) முதலிய சொற்களைத் தவிர்த்த உயிரினங்களைக் குறிக்காத பிராதிபதிகங்களோடும், பெண்பாலில் 'ஊங்' ஒட்டு வரும். அலாபூ$^{3}$: 'சுரைக்காய்', கர்கந்தூ$^{4}$: 'இலந்தை மரம்' ஆனால் க்ருகவாகு: ஒருவகைப் பல்லி ரஜ்ஜு:, ஹனு: (தாடை)

**4.1.67** ப³ாஹ்வந்தாத் ஸம்க்³ஞாயாம்

பெயரைச் சுட்டும், 'பாஹு' (கை) என்ற சொல்லை யிறுதியுறுப்பின ராகக் கொண்ட பிராதிபதிகத்தின் பின் 'ஊங்' ஒட்டு இணைக்கப்படும்.

ப⁴த்³ர ப³ாஹூ: 'ஒரு பெயர்

ஜாலப³ாஹூ:

**4.1.68** பங்கோ³ஸ்' ச

'பங்கு³' (நொண்டி) என்ற சொல்லுக்கப் பின்னும், பெண்பாலைக் குறிக்க 'ஊங்' ஒட்ட வரும்.

பங்கூ³: நொண்டி (பெண்பால்)

வா : ஸ்'வஸுர்' (மாமனார்) என்ற சொல்லின் 'உ'வும் 'அ'வும் (இவ்வொட்டிணைக்கும்போது) கெடும்.

ஸ்'வஸ்'ரூ: 'மாமியார்'

**4.1.69** ஊருத்தரபத³ாதௌ³பம்யே

'ஊறு' (தொடை) என்ற சொல்லினிறுதியுறுப்பினராக நிற்கும் பிராதி பதிகத்தின் பின், உவமையைச் சுட்டும்போது, பெண்பாலைக் குறிக் க 'ஊங்' ஒட்டு வரும். கத³லீஸ்தம்பே⁴ாரூ: 'வாழை மரத்தைப் போன்ற தொடையுடைய வள்' நாக³நாஸோரூ: 'யானைத் துதிக்கை போன்ற தொடையுடையவள்' கரபே⁴ாரூ: ஆனால் வ்ருத்தோரு : ஸ்த்ரீ 'உருண்டையான தொடையுடையவள்'

**4.1.70** ஸம்ஹித ஸ'ப²லக்ஷண வாமாதே³ஸ்' ச

ஸம்ஹித, ஸ'ப², லக்ஷண, வாம ஆகிய சொற்கள் முதலுறுப்பினராக அமைந்து நிற்கும் பிராதிபதிகத்தின் பின்னும் 'ஊங்' ஒட்டு வரும் 9 பெண்பாலில்)

ஸம்ஹிதோரூ: 'இணைந்த, அதாவது பருமனான தொடையுடையவள்' ஸ'பே²ாரூ: 'பசுவின் குளம்புகளைப் போன்று இணைந்துள்ள தொடையுடையவள்'

லக்ஷயோரூ : 'மச்சத்தையுடைய தொடை கொண்டவள்'

வாமோரூ: அழகான தொடையுடையவள்'

வா: ஸஹித ஸஹாப்⁴யாம் சேதி வக்தவ்யம் ஸஹித, ஸஹ (உடன்) எ ன்ற சொற்களும் இத்துடன் சேர்ந்துக் கூறப்பட வேண்டும்.

ஸஹிதோரூ. ஸஹோரூ.

**4.1.71** கத்³ரு கமண்ட³ல்வோஸ் ச²ந்த³ஸி

கத்³ரு, கமண்ட³லு ஆகிய சொற்களோடும் வேதமொழியில், பெண்பாலில், 'ஊங்' ஒட்டு வரும்.

கத்³ரூஸ்'ச வை ஸுபர்ணீ ச

மாஸ்ம கமண்ட³லூம் ஸூ'த்³ராய த³த்³யாத்

பேச்சு மொழியில், கத்3ரு:, கமண்டலு:

வா: கு3க்3கு3லு மது4ஜதபதயாலூனா மிதி வக்தவ்யம்
வேத மொழியில், 'கு3க்3கு3லூ' முதலிய சொற்களோடும் 'ஊங்' வரும்.
கு3க்கு3லூ : மதூ4:
ஜதூ: பதயாலூ :

**4.1.72** ஸம்க்3ஞாயாம்
கத்3ரு, கமண்ட3லு என்ற சொற்கள் ஒரு பெயராக அமையும்போது பெண்பாலில் 'ஊங்' ஒட்டு வரும். வேதமொழியல்லாத இடங்க ளை இது குறிக்கும்.
கத்3ரூ: கமண்ட3லூ : பெயரைக் குறிக்காவிட்டால்,
கத்3ரு :, கமண்டலு:

**4.1.73** ஸா'ர்ங்க3ரவாத்3யஞோஙீன்
'ஸா'ர்ங்க3ரவா' முதலிய சொற்களுக்குப்பின்னும், 'ஞ்' என்ற எழுத் துயிறுதியில் அமையாமலிருக்குஞ் சொற்களுக்குப்பின்னும் 'ஙீன்' ஒட்டு வரும்.ஸா'ர்ங்க3ரவீ 'ஸாரங்கரவப் பெண்', காபட1வீ 'காபடவப் பெண்:'
அஞந்த – வை3தீ பி3தா வழித்தோன்றல் (பெண்) ஔர்வீ.

**4.1.74** யஙஸ்சாப்
'யங்' ஐ யீறாகக் கொண்ட பிராதிபதிகங்களுக்குப்பின் பெண்பாலில் 'சாப்' ஒட்டு வரும்.
'ஞ்யங்', 'ஷ்யங்' இரண்டையும் குறிக்கும் ஆம்ப3ஷ்ட்2யா 'அம்பஷ்ட இனத்தைச் சேர்ந்த பெண்' ஸௌவீர்ய – 'ஸௌவீர்ய இனத்தைச் சேர்ந்தவள்' ஷ்யங் காரீஷக3ந்த்4யா, வாராஹ்யா ப3ாலாக்2யா

வா: ஷாச்ச யஞ:
'ஷ' என்ற எழுத்து, 'ய' ஈற்றுக்கு முன் நிற்கும் சொற்களோடும் 'சாப்' ஒட்டு வரும்.ஸா'ர்கராக்ஷ்யா 'ஸார்கராக்ஷ வழித்தோன்றல் (பெண்) பௌதிமாஷ்யா

**4.1.75** ஆவட்'யாஸ்' ச
'ஆவட்ய' என்ற சொல்லுக்குப்பின் 'சாப்' ஒட்டு பெண்பாலைக் குறிக்க வரும். ஆவட்'யா 'ஆவட்'/(பெண்) வழித்தோன்றல், ஆனால் கிழக்கத்திய இலக்கணக்காரர்களின் கருத்துப்படி எல்லா இடங்களிலும் 'ஷ்ப2' ஒட்டு வரும். ஆவட்'யாயனீ

**4.1.76** தத்3தி4தா :
தத்திதங்கள், இது ஒரு அதிகார சூத்திரம். இச்சூத்திரத்திலிருந்து தொடங்கி ஐந்தாவது அத்தியாயம் முடிவு வரை கூறப்படும் ஒட்டுக்கள் 'தத்திதம்' என்ற பெயர் பெறும் (3.1.13)

**4.1.77** யூனஸ்தி:

'யுனன்' (இளைஞன்) என்ற சொல்லோடு பெண்பாலைக் குறிக்க, 'தி' என்ற 'தத்தித' ஒட்டு இணைக்கப்படும். யுவதி: (யுவன்+தி:) 'இளவயது மங்கை'

**4.1.78** அணிஞோர் அநார்ஷயோர்
கு$^{3}$ரூபோத்தமயோ: ஷ்யங் கோ$^{3}$த்ரே

ஈற்றயலசை 'குரு'வாக அமைந்த, இருடிகளின் பெயரைச் சுட்டாத பெயரடிச் சொல்லோடு 'கோத்ர' ஒட்டுக்களான 'அண்' இஞ் எங்கெங்கு விதிக்கப்பட்டதோ அங்கு 'ஷ்யங்' ஒட்டு பெண்பாலைக் குறிக்க இணைக்கப்படும்.

காரீஷ க$^{3}$ந்த்$^{4}$யா
கௌமுத$^{3}$ க$^{3}$ந்த்$^{4}$யா
வாராஹ்யா
ஆனால் ஆர்தப$^{4}$ாகீ
வாஸிஷ்டீ$^{1}$, வைஸ்$^{1}$வாமித்ரீ

**4.1.79** 'கோ$^{3}$த்ராவயவாத்

பிரதானமல்லாத கோத்ரத்தைக் குறிக்கும் சொற்களோடு, பெண்பாலைக் குறிக்க, 'அண்', இஞ்உக்குப் பதிலியாக 'ஷ்யங்' ஒட்டு வரும். (ஈற்றயலசை 'குரு'வாக அமையாத போதிலும்)

பௌணிக்யா, பெ$^{4}$ௌணிக்யா

**4.1.80** க்ரௌட்$^{3}$யாதி$^{3}$ப்$^{4}$யஸ்$^{1}$ச

'க்ரௌடி$^{3}$' முதலிய சொற்களோடும், பெண்பாலில் 'ஷ்யங்' ஒட்டு வரும்.

க்ரெட்$^{3}$யா, லாட்$^{3}$யா

வா: ஸூத யுவத்யாம்

இளவயது மங்கை என்ற பொருளைச் சுட்டும்போது 'ஸூத' என்ற சொல்லுக்குப்பின் 'ஷ்யங்' ஒட்டு வரும்.

ஸூத்யா, வேறுபொருளில், ஸூதா.

வா: பே$^{4}$ாஜ க்ஷத்ரியே

'க்ஷத்ரிய' என்ற பொருளைச் சுட்டும்போது 'பே$^{4}$ாஜ' என்ற சொல்லுக்கப்பின் 'ஷ்யங்' வரும்.

பே$^{4}$ாஜ்யா –
வேறு பொருளில் – பே$^{4}$ாஜ்ஜா

**4.1.81** தை$^{3}$வயக்$^{3}$ஞி ஸெ$^{1}$ளசிவ்ருக்ஷிஸாத்யமுக்$^{3}$ரி க$^{2}$ாண்டே$^{2}$
வித்$^{3}$தி$^{4}$ப்யோ அன்யதரஸ்யாம்

தை$^{3}$வயக்$^{3}$ஞி, ஸெ$^{1}$ளசி, வ்ருக்ஷி, ஸாத்யமுக்$^{3}$ரி காண்டே$^{1}$வித்$^{3}$தி$^{4}$ ஆகிய சொற்களுக்களோடு, 'ஷ்யங்' ஒட்டு விருப்பாக வரும்.

தை3வயக்3ஞ்யா/தை3வயக்3ஞீ
ஸௌசி விரக்ஷ்யா/ஸௌசிவ்ருக்ஷீ
ஸாத்யமுக்3ரியா/ஸாத்யமுக்3ரீ
காண்டே வித்3த்4யா/காண்டேவித்3தீ4

**4.1.82** ஸமர்த2னாம் ப்ரத2மாத்3வா

ஸமர்த2னாம், ப்ரத2மாத்3வா ஆகிய மூன்று சொற்களும், அதிகாரமாக, 'ப்ராக்3தி3ஸே1ா விப4க்தி:' (5.3.1) வரை, அனுவிருத்தி மூலம் தொடரும்.
(1) ஸமர்த2னாம், 'அமைத்திருக்கும் சொற்களின்'
(2) ப்ரத2மாத் 'முதல் சொல்லுக்குப்பின்'
(3)வா 'மாற்றாக' 'தத்தித' ஒட்டுக்கள் வேறுவிதமாகப் பயன்படுத்தப்படும்போது, சூத்திரத்திலமைந்து நிற்கும் சொற்களில் முதலில் வரும் சொற்களுக்குப்பின் வரும்.
காட்டாக, தஸ1யாபத்யம் (4.1.92) 'அவனுடையபிள்ளை' என்று அமைகிறது. குறிக்கும் தத்தித ஒட்டுக்கள் ஆறாம் வேற்றுமையிலமைந்திருக்கும் சொல்லுக்குப் பின் வரும். உபகோ3ரபத்யம் = ஔபக3வ வோன்றவை இதற்கு எடுத்துக் காட்டாகும்.
சூத்திரத்தில் காணப்படும் 'வா' என்ற சொல் இதே பொருளைக் குறிக்க ஒரு தொடரும் வரலாமென்று சுட்டுகிறது உபகோரபத்யம்.

**4.1.83** ப்ராக்3 தீ3வ்யதோ அண்

'தேன தீ3வ்யதி' (4.4.2) வரையில் விளக்கப்பட்டவைகளில் 'அண்' ஒட்டு வரும். 'அண்' ஒட்டு, தொடர்ந்து வரும் 3 பாதங்களிலும், அதிகாரமாக ( Governing) வரும், இச்சூத்திரம் ஒரு அதிகார சூத்திரமாகவோ, பரிபாஷாவாகவோ அல்லது ஒரு விதியாகவோ கருதப்படுகிறது.

**4.1.84** அஸ்வதீயாதி3ப்4யஸ் ச

'அண்' ஒட்டு, 'அஸ்'வபதி முதலிய சொற்களுக்குப்பின் சூ.4.4.2க்கு முன் குறிப்பிடப்பட்ட பொருட்களில் வரும்.
ஆஸ்'வபதம், ஸ1ாதபதம்
அடுத்த சூத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் 'ண்ய' ஒட்டுக்குப் புறனடையாக இச்சூத்திரமமைகிறது.

**4.1.85** தி3த்யதி3த்யாதி3த்ய பத்யுத்தர பதாண்ண்ய:

தி3தி, அதி3தி ஆதி3த்ய, ஆகிய சொற்களுக்குப்பின்னும் 'பதி' என்ற சொல்லையிறுதியில் கொண்ட சொற்களுக்குப்பின்னும்
(மேலே கூறப்பட்ட பொருட்களில், ப்ராக்3தீவ்யத:)
'ண்ய' ஒட்டு வரும்.
தை3த்ய: 'திதியின் பிள்ளை'
ஆதீ3த்ய: 'ஆதிதியின் பிள்ளை'

ஆதீ3த்யம் – 'ஆதித்யனின் பிள்ளை'
ப்ராஜாபத்யம் – 'பிரஜாபதியின் பிள்ளை'
ஸைனாபத்யம்– 'ஸேனாபதியின் பிள்ளை'

வா: யமாச்சேதி வக்தவ்யம்
'யம' என்ற சொல்லுக்குப்பின்னும் 'ண்ய' வரும்.
யாம்யம்.

வா: வாங் மதி பித்ரு1 மதாம் ச2ந்த3ஸ்யுப ஸம்க்3யானம்.
வேதமொழியில் 'வாக்' முதலியவைகளுக்கப்பின்னும் 'ண்ய' வரும்.
வாச்யம், மாத்யம், பைத்ரு1மத்யம்

வா: ப்ருதி2வ்யா ஞாஞௌ
'ப்ருதி2வீ' என்ற சொல்லுக்குப்பின் 'ஞ', 'அஞ்' ஒட்டுக்கள் வரும்.
பார்தி2வா (ப்ரு1தி2வீ+ஞ+டாப்)
பார்தி2வீ (ப்ரு1தி2வீ+அஞ்+ஙீப்)

வா: தே3வாத்3 யஞஞௌ
'தேவ' என்ற சொல்லுக்குப்பின் 'யஞ்' 'அஞ்' ஒட்டுக்கள் வரும்.
தைவ்யம், தைவம்–'தெய்வீகத்தன்மை வாய்ந்த'

வா: ப3ஹிஷஷ்டி1 லோபஸ்1ச
ப3ஹிஷ் உக்குப்பின்னும் 'யஞ்' ஒட்டு வரும் 'டி' கெடும்.
பா3ஹ்ய: (ப3ஹிஷ்+யஞ், பா3ஹிஷ்,
பா3ஹ் 0+யஞ்=பா3ஹ்ய: 'புறம்பான'

வா: ஈகக் ச
'பஹிஷ்' ஒடு 'ஈகக்' ஒட்டும் வரும், 'டி'யும் கெடும். பா3ஹுக:

வா: ஈகஞ் ச2ந்த3ஸி
வேதமொழியில், 'ப3ஹிஷ் 'உக்குப்பின் 'ஈகஞ்' ஒட்டு வரும். 'டி' கெடும்.
பா3ஹீக:
இவ்விரண்டுக்கும் (மேலே கூறிய வார்த்திகத்துக்கும் இதற்கும்) சுரத்தில் வேறுபாடு காணப்படும். இங்கு கொடுக்கப்பட்டதில், முதல சையில் உதாத்தம் அமையும்.

வா: ஸ்த2ாம்னோ அகார:
'ஸ்த2ாமன்' உக்குப்பின் 'அ' ஒட்டு வரும்.
அஸ்1வத்த2ாம:

வா: லோம்னோ அபத்யே ப3ஹுஷு

'பிள்ளை' (அபத்யம்) என்ற பொருளைக் குறிக்கும்போது பன்மையில், 'லோமன்' என்ற சொல்லுக்குப்பின் 'அகாரம்' வரும்.

உடு3லோமா:, ஸ1ரலோமா:

ஆனால் ஔடு3லோமி: (ஒருமை)

வா: ஸர்வத்ர கோரஜாதி3 ப்ரத்ய்ய ப்ரஸங்கே யத்

'கோ3' என்ற சொல்லோடு, உயிரெழுத்தில் தொடங்கும் ஒட்டுக்கள் வருமிடங்களில் 'யத்' வரும்.

க3வ்யம் – 'பசுவிலிருந்து கிடைக்கப்பெற்ற'

வா: ண்யாத3யோ அர்த2விஸே1ஷ லக்ஷணா த3பவாத3ாத் பூர்வ விப்ரதிஷேதே4ன

இச்சூத்திரத்தைத் தொடர்ந்து வரும் சூத்திரங்களில் கூறப்பட்ட குறிப்பிட்ட பொருட்களைக் கொண்ட ஒட்டுக்கள் வருமிடங்களைத் தவிர்த்து ஏனைய இடங்களில் 'ண்ய' முதலிய ஒட்டுக்கள் வரும்.

காட்டாக, 'அண்' ஒட்டு, வழித்தோன்றல்' என்ற பொருளில் வரும். ஆனால், 'தி3தி' முதலிய சொற்களுக்குப்பின் 'ண்ய' ஒட்டுத்தான் வரும் 'அண்' அல்ல.

**4.1.86** உத்ஸாதி3ப்4யோ அஞ்

'உத்ஸ' முதலியவைகளுக்குப்பின் (ப்ராக்3தீ3வ்யதி' முன்பு விளக்கப்பட்ட பொருட்களில்) 'அஞ்' ஒட்டு வரும்.

இது 'அண்' (4.1.83) இச்சூத்திரத்தையடுத்து வரும் சூத்திரங்களில் விளக்கப்பட்டிருக்கும் (சிறப்புப் பொருட்களைச் சுட்டும்) ஒட்டுக்கள் ஆகியவைகளைத் தடுக்கிறது.

ஔத்ஸ:, ஔத3பான:

வா: க்3ரீஷ்மாதச்ச2ந்த3ஸிதி வக்தவ்யம்

'க்3ரீஷ்ம' என்ற சொல் 'யாப்பு' என்ற பொருளைச் சுட்டாமல் அமையும்போதுதான் இவ்வொட்டு வரும்.

க்3ரைஷ்மீ த்ரிஷ்டு2ப்

ஆனால் க்3ரைஷ்ம: 'கோடைகாலத்து'

**4.1.87** ஸ்த்ரீ பும்ஸாப்4யாம் நஞ்ஸ்நௌ ப4வனாத்

'நஞ்', ஸ்நஞ்' ஆகியவொட்டுக்கள் முறையே ஸ்த்ரீ, பும்ஸ் ஆகிய சொற்களுக்குப்பின், இச்சூத்திரத்திலிருந்த 'த4ன்யானாம் ப4வனே க்ஷேத்ரே க2ஞ் (5.2.1) என்ற சூத்திரம் வரையில் கொடுக்கப்பட்ட பொருட்களில் வரும்.

ஸ்த்ரைணம் (ஸ்த்ரீ+ஸ்நஞ்) 'பெண்தன்மையான'

பௌஸ்த்னம் (பும்ஸ்+ஸ்நஞ்) 'ஆண்தன்மையான'

தொடர்ந்து வரும் சூத்திரங்களில் பெண்களிடம் காணப்படும். (4.3.53),. பெண்கள் கூட்டம் (4.2.37) பெண்களிடமிருந்து வரும் (4.3.74) ஆகிய பல பொருட்களைக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஸ்த்ரைணம் என்ற சொல், இத்தகைய பொருட்களைச் சுட்டும். அதேபோல், பௌஸ்த்னம் என்ற சொல்லும், 'ஆண் தன்மையான, ஆண்களிடம் காணப்படும், ஆண்கள் கூட்டம்' போன்ற பல பொருட்களைச் சுட்டும்.

**4.1.88** த்விகோ$^{3}$ர் லுக$^{3}$பனபத்யே

த்$^{3}$விகு$^{3}$ (எண்ணுத்தொகை) தொடர்பாக விதிக்கப்பட்ட, தத்தித ஒட்டு (தேனதீவ்யதி என்ற சூத்திரத்துக்கு முன் சூத்திரங்களில் கூறப்பட்ட பொருட்களில்) 'தந்தை வழியான' என்ற பொருளைத் தவிர்த்து வரும்போது, அவ்வொட்டு கெடும் (லுக்)

பஞ்சகபால: '5 பாத்திரங்களில் தயாரிக்கப்பட்ட',

த்$^{3}$விவேத$^{3}$: 'இரண்டு வேதங்களைப் படித்தவன்' பஞ்சகபால: (=பஞ்சஸு கபாலேஷு ஸம்ஸ்க்ருத:) இங்கு 4.2.16 இன்படி 'அண்' ஒட்டுச் சேர்க்கப்படும். 4.1.88 இன்படி இந்த 'அண்' கெடும் ஆகவே, இங்கு முதலசையில் விருத்தி வராது.

ஆனால் த்$^{3}$வைதே$^{3}$வதத்தி '2 தேவதத்தர்களின் வழித் தோன்றல்' பாஞ்சகபாலம் (எண்ணுத் தொகையல்ல)

**4.1.89** கோ$^{3}$த்ரே அலுக$^{3}$சி

2.4.63 முதலிய சூத்திரங்களில் விதிக்கப்பட்ட, பன்மையிலமையும் கோத்ர ஒட்டுக்களின் மறைவு, அவ்வொட்டுக்கள் உயிரெழுத்தை முதலாகக் கொண்டதாக அமைந்து, சூ.4.4.2க்கு முன் கூறப்பட்ட பொருட்களைச் சுட்டும்போது நிகழாது.

அதாவது, இச்சூத்திரம் 2.4.63க்குத் தடை விதிக்கிறது.

க$^{3}$ார்கீ$^{3}$யா: – 'கர்கர்களின் மாணவர்கள்'

க$^{3}$ார்க்$^{3}$ய+ச$^{2}$ (7.1.2:6.4.151)

**4.1.90** யூனி லுக்

ஓர் உயிரெழுத்தை முதலில் கொண்ட ஒட்டு (4.4.2க்கு முன் கூறப்பட்ட பொருட்களில்) க்குமுன் நிற்கும் யுவன் (இளையதலை முறை) (4.1.63) ஒட்டு மறையும்.

ப$^{2}$ாண்ட$^{3}$ாஹுதி: (ப$^{2}$ாண்ட$^{2}$ாஹுத+இஞ் 4.1.95)

'ப$^{2}$ாண்டாஹுத வழித் தோன்றல்' இதனுடைய யுவன் வடிவம்

ப$^{2}$ாண்ட$^{3}$ாஹுத: (ப$^{2}$ாண்ட$^{3}$ாஹுதி+ண (4.1.150) 'பாண்ட$^{2}$ாஹுத கோத்திரத்தின் இளைய தலைமுறையைச் சேர்ந்தவன்' அவனுடைய மாணவர்கள் என்ற பொருளைக் குறிக்கும்போது, விருத்தியையுண்டாக்கிய யுவன் ஒட்டான 'ண' ஒட்டு (4.1.150) கெடுகிறது. அதன் விளைவாக, இவ்வடிவத்தின் மூல வடிவமான ப$^{2}$ாண்$^{3}$டாஹுதி: என்ற வடிவம் கிடைக்கும். இங்கு 'அவன்

மாணவர்கள்' என்ற பொருளைக் கொடுக்கும் ஒட்டு எதுவென்று நோக்குங்கால் சூ.4.2.112இல் கூறப்பட்ட 'அண்' ஒட்டுத்தான் இத்துடனிணைக்கத் தகுதியான தென்று புலப்படும். ஆகவே ப$^{2}$ாண்ட$^{3}$ாஹதி:+அண்=ப$^{2}$ாண்ட$^{3}$ாஹதா 'பாண்டாஹதர்களின் மாணவர்கள்' என்ற வடிவம் கிடைக்கிறது.

ப$^{4}$ாக$^{3}$வித்தா: (ப$^{4}$ாக$^{3}$வித்த → ப$^{4}$ாகவித்தி + ட$^{2}$க் (4.1.148)=ப$^{4}$ாக$^{3}$வித்திக:=ப$^{4}$ாகவித்தா: (4.2.112) 'பாகவித்தர்களின் மாணவர்கள்'

திக+பி$^{2}$ஞ் (4.1.154)=தைகாயனி:=தைகாயனீய: (தைகாயனி+ச$^{2}$ (4.1.149)=தைகாயனீயா: (4.2.114)

**4.1.91** ப$^{2}$க்பி$^{2}$ஞோரன்யதரஸ்யாம்

ப$^{2}$க், பி$^{2}$ஞ் ஆகிய யுவன் ஒட்டுக்கள் எல்லாமே, இச்சூழலில் கட்டாயமாகக்கெடும் என்று கூறுகிறது. இச்சூத்திரம், ப$^{2}$க், பி$^{2}$ஞ் ஒட்டுக்கள் தொடரும்போது விருப்பாக அவைகள் கெடும் என்று விதிக்கிறது.

க$^{3}$ர்க$^{3}$ → க$^{3}$ார்க்$^{3}$ய (4.1.105), இதன் 'யுவன்' வடிவம் க$^{3}$ார்க்$^{3}$யாயண: (க$^{3}$ார்க்$^{3}$ய+ப$^{2}$க் (4.1.101) க$^{3}$ார்க்$^{3}$யாயணர்களின் மாணவர்கள் என்ற பொருளில் க$^{3}$ார்கீய: அல்லது க$^{3}$ார்க்$^{3}$யாயணீயா: என்று 2 வடிவங்கள் ஆகும். வாத்ஸீயா:/வாத்ஸ்யாயனீயா:

பி$^{2}$ஞ் ஒட்டுடம்

யஸ்க+அண் (4.1.112), யாஸ்க: → யாஸ்காயனி

(யாஸ்க+பி$^{2}$ஞ் (4.1.156)=யாஸ்கீயா:=யாஸ்கீயா:/யாஸ்காயனீயா:

**4.1.92** தஸ்யாபத்யம்

'அண்' முதலிய ஒட்டுக்கள் (4.1.83 இலிருந்து தொடர்ந்து வரும் சூத்திரங்களில் கூறப்பட்டவை அவ்வழித்தோன்றல் (Discendant) என்ற பொருளைக் கொடுக்கும். இச்சூத்திர்த்தில் கொடுக்கப்பட்ட பொருள், இதற்கு முந்திய சூத்திரங்களில் கூறப்பட்ட ஒட்டுக்களுக்கும், இதைத் தொடர்ந்து வரும் சூத்திரங்களில் கூறப்படும் ஒட்டுக்களுக்கும் உரியது. அதாவது, முற்சூத்திரங்களில் குறிப்பிட்ட 'அண்' 'ண்ய' ஆகியவைகளும் 'இஞ்' (4.1.95) முதலியவைகளும் இப்பொருளைச் சுட்டும்.

ஔபக$^{3}$வ; ஆஸ்வபத

**4.1.93** ஏகோ கே$^{3}$ாத்ரே

'கே$^{3}$ாத்ர'த்தைக் குறிக்க ஒரேயொரு ஒட்டுத்தான் பயன் படுத்தப்படும். பேரனிடமிருந்து தொடங்கி, அவனுக்கடுத்தடுத்த தலைமு றையில் தோன்றும் பிள்ளைகள் 'கோத்ரம்' என்ற சொல்லால் குறிப்பிடப்படுவர் (4.1.162) அவர்களைக் குறிக்க, ஒரேயொட்டுத்தான் பயன்படுத்தப்படுமென்று இச்சூத்திரம் குறிக்கிறது.

காட்டாக, க$^{3}$ர்க$^{3}$னின் மகன் க$^{3}$ார்கி$^{3}$

(க$^{3}$ர்க$^{3}$+இஞ் (4.1.95), கா$^{3}$ர்கி$^{3}$யின் மகன் அதாவது கர்கனின் பேரன்.
கா$^{3}$ர்க்$^{3}$ய: (க$^{3}$ர்க$^{3}$+யஞ்), இந்தக்கா$^{3}$ர்க்$^{3}$யனின் மகனும் 'கா$^{3}$ர்க்$^{3}$ ய' என்றேயமையும் இச்சொல், கா$^{3}$ர்க்$^{3}$ய' என்ற சொல்லோடு ' யஞ்' இணைத்துத் தருவிக்காமல், இவர்களுக்கு முதல் புருடனான 'க$^{3}$ர்க$^{3}$' என்பதோடு 'யஞ்' ஒட்டு இணைத்து ஆக்கப்படும். இது ஒரு கருத்து. மற்ற கருத்தின்படி இச்சூத்திரம், அடிச்சொல்லுக்கு ஒரு நியமம் விதிக்கிறது. அதாவது, பேரன், அதையடுத்த தலைமுறையில் தோன்றுபவன். எல்லாவற்றையும் குறிக்க, மூலபுருடனான (தந்தை) வனைக்குறிக்கும் சொல்லோடு க$^{3}$ர்க்$^{3}$ 'யஞ்' ஒட்டு இணைத்து, பேரன், அவன் மகன் என்ற சொற்கள் பெறப்படும். அதாவது, க$^{3}$ர்க$^{3}$: தந்தை கா$^{3}$ர்கி$^{3}$:– மகன், கா$^{3}$ர்க்$^{3}$ய:– பேரன்.
கா$^{3}$ர்க்$^{3}$ய:–
கா$^{3}$க$^{3}$
கா$^{3}$கி$^{3}$
கா$^{3}$க்ய:
கா$^{3}$க்$^{3}$ய: (இச்சொல்லும் க$^{3}$ர்க$^{3}$விலிருந்து பெறப்படும்)

**4.1.94** கோ$^{3}$த்ராத்$^{3}$ யன்யஸ்த்ரியாம்

'யுவன்'ஐக் குறிக்கும்போது, பேரனைக் குறிக்கும் சொல்லையாக்கும் ஒட்டிணைத்த பிறகுதான் ஒரு புது ஒட்டை இணைக்க வேண்டும் . ஆனால் பெண்பாலில் இச்சொல் யுவன் என்று குறிப்பிடப்படாது ஆகையால் இங்கு புது ஒட்டு வராது.
கோத்ர, யுவன் ஆகியவைகள், 4.1.162, 163 சூத்திரங்களில் விளக்கப்பட்டிருக்கின்றன.
க$^{3}$ர்$^{3}$க: – தந்தை

| | |
|---|---|
| | கா$^{3}$ர்கி$^{3}$ –மகன் |
| அபத்யம் | கா$^{3}$ர்க்$^{3}$ய –பேரன் (கோ$^{3}$த்ர) |
| | கா$^{3}$ர்க்$^{3}$யாயண:– (யுவன்) (க$^{3}$ர்க$^{3}$, கா$^{3}$ர்கி$^{3}$ உயிரோடிருந்தால்) |

வாத்ஸ்யாயன என்பது 'வத்ஸ' னின் 'யுவன்' இதுவும் ஒரு நியமவிதி

**4.1.95** அத இஞ்

'அ'வீற்றுச் சொல்லோடு (அவன் மகன் என்ற பொருளில்)
'இஞ்' ஒட்டு வரும்.
தா$^{3}$க்ஷி: (த$^{3}$க்ஷ+இஞ்)
இங்கு 'அண்' வராது

**4.1.96** பா$^{3}$ஹ்வாதி$^{3}$ப்$^{4}$யஸ்' ச

'பா$^{3}$ஹு 'முதலிய சொற்களுக்குப்பின்னும் 'இஞ்' (அவன் மகன் என்ற பொருளில்) வரும்.
பா$^{3}$ஹவி: (பா$^{3}$ஹு+இஞ்)

ஔபப$^{3}$ாஹவி: (உபப$^{3}$ாஹு+இஞ்)

வா: ப$^{3}$ாஹ்வாதி$^{3}$ ப்ரப்$^{4}$ருதிஷு யேஷாம்
த$^{3}$ர்ஸ$^{1}$னம் கே$^{3}$ாத்ராப$^{4}$ாவே லௌகிகே ததோ அன்யத்ர கேஷ ாம் ப்ரதிஷேத$^{4}$:
ஒரு கோத்திரத்துக்குத் தனது பெயரையளித்த ஒரு குடும்பத்துக்கு மூல புருடனின் பெயரைச் சுட்டுவதாக 'பாஹு' முதலிய சொற்கள் வரும்போது மாத்திரந்தான் 'இஞ்' ஒட்டு அச்சொற்களுடனிணைக் கப்படும். வேறு இடங்களில், 'ப$^{3}$ாஹவ: என்ற சொல்லாகும். இது 'பாஹு' என்பவனின் மகன் என்ற பொருளைக் கொடுக்கும்.

வா: ஸம்ப$^{3}$ந்தி$^{4}$ஸ$^{1}$ப்$^{3}$தானாம் ச தத்ஸத்$^{3}$ரு$^{1}$ ஸாத்ப்ரதிஷேத$^{4}$:
'உறவினர்' என்ற பொருளைச் சுட்டும் சொற்களில் எந்த விதி பயன் படுத்தப்படுகிறதோ, அதே சொற்கள் ஒரு பெயரைக் குறிக்குமானால், அதே விதியைப் பயன்படுத்தக்கூடாது,
ஸ்$^{1}$வஸு$^{1}$ர 'மாமனார்' ஸ்$^{1}$வாஸு$^{1}$ர்ய: – 'மாமனாரின் சந்ததி' (ஸ்$^{1}$வஸுர+யத் 4.1.137) அதாவது மைத்துனன்'
ஆனால் ஸ்$^{1}$வாஸு$^{1}$ரி: (ஸ்$^{1}$வஸு$^{1}$ர+இஞ் 'ஸ்$^{1}$வஸுரன் என்ற பெயருடையவனின் மகன்'

**4.1.97** ஸுத$^{4}$ா துரகங் ச
'ஸுத$^{4}$ாத்ரு' என்ற சொல்லுடன் (அபத்ய என்ற பொருளில்)
'இஞ்' ஒட்டு வரும். இவ்வொட்டுக்கு முன் 'அகங்' ஆதேசமாகும்.
ஸௌத$^{4}$ாதகி: – 'ஸு தாதுவின் வழிவந்தவன்'

வா: வ்யாஸவருட$^{3}$ நிஷாத$^{3}$ சண்ட$^{3}$ால பி$^{3}$ம்பாணாமிதி வக்தவ்யம்.
வ்யாஸ முதலிய சொற்களோடும் 'அகங்' இங் வரும்.
வ்யாஸ – வையாஸகி:
வருட$^{3}$ – வாருட$^{3}$கி:
நிஷாத$^{3}$ – நைஷாத$^{3}$கி
சண்டால – சாண்டாலகி:
பிம்ப – பைம்பகி;

**4.1.98** கோ$^{1}$த்ரே குஞ்ஜாதி$^{3}$ப்$^{4}$யஸ் ச்ப$^{2}$ஞ்
கோத்ரத்தைக் குறிக்கும்போத 'குஞ்ஜ' முதலியவைகளுடன் (அவன் வழித்தோன்றல்' என்ற பொருளில்) 'ச்ப$^{2}$ஞ்' ஒட்டு வரும்.
கௌஞ்ஜாயன்ய: (குஞ்ஜ+ச்ப$^{2}$ஞ்=கௌஞ்ஜ+ஆயன்+அ=கௌஞ்ஜாயன+ய (5.3.113) 'குஞ்ஜன்' என்பவனின் பேரன்/கொள்ளுப்பேரன்.
(இரு கௌஞ்ஜாயன்யௌ, (பன்) கௌஞ்ஜாயனா: 'ச்ப$^{2}$ஞ்' ஒட்டின் 'ச', ப$^{2}$ஞ் என்ற மற்றொரு ஒட்டிலிருந்து வேறுபாடு காண்பிக்கவும் 'ஞ்' விருத்தியாவதற்காகவும் இதில் காணப்படுகிறது.

ஆனால் கௌஞ்ஜி: 'குஞ்சனின் மகன்' இது கோத்திரத்தைக் குறிக்க ாது. 'கோத்ர' 4.1.112 வரை அனுவிருத்தியாகும்.

**4.1.99** நட³ாதி³ப்⁴யோ ப²க்

'நட³' முதலியவைகளுடன் கோத்ராபத்யத்தைக் குறிக்க) ப²க் ஒ ட்டு வரும். நாட³ாயன: (நட³+ப²க்=நாட³+ஆயன (7.2.118;7.1.2) 'நட' என்பவனி ன் பேரன் அல்லது கொள்ளுப்பேரன்.

சாராயண:

ஆனால் நாடி³: 'நடன்' என்பவனின் மகன்

**4.1.100** ஹரிதாதி³ப்⁴யோ அஞ:

'அஞ்' இல் முடியும் 'ஹரித' முதலியவைகளுக்கும் பின் (அபத்ய என்ற பொருளில்) 'ப²க்' ஒட்டு வரும். 'பி³த' வகுப்பின் உட்பிரிவு 'ஹரித' முதலிய சொற்கள்.

ஹாரித (ஹரித+அஞ் (4.1.104) ஹரிதனின் பேரன்/கொள்ளுப்பேரன். ஆனால், 'ஹாரிதனின் மகன்' என்ற உறவைக்குறிக்கும் சொல். ஹாரிதாயன, இச்சூத்திரத்தைப் பயன்படுத்தி 'ப²க்' ஒட்டிணைத்துப் பெறப்படும். (ஹாரித+ப²க்)

'கோத்ர' ஒட்டுக்களோடு சேர்த்து 'ப²க்' ஒட்டு கூறப்பட்டிருந்தாலும், இவ்வொட்டு ஒரு 'யுவன்' ஒட்டாகும். சூ.4.1.98 இன்படி ஒரேயொரு 'கோத்ர' ஒட்டுத்தான் ஒரு சொல்லுடன் இணைக்க முடியும். ஏற்கெனவே 'அஞ்' என்ற ஒட்டு இணைத்து 'ஹாரித' என்ற சொல் தருவிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், இச்சொல் மற்றொரு கோத்ர ஒட்டு (ப²க)டன் இணைக்கப்படமாட்டாது. ஆகவே, இவ்வொட்டு (ப²க்) ஒரு 'யுவன்' ஒட்டாகும்.

**4.1.101** யஞிஞோஸ்' ச

'யஞ்', 'இஞ்' ஆகியவைகளை இறுதியில் கொண்ட பிராதிபதிகங்களு க்குப்பின்னும் 'ப²க்' ஒட்டு (அபத்ய என்ற பொருளைச் சுட்ட)வரும்.

க³ார்க்³யாயண:, வாத்ஸ்யாயன:

க³ர்க³+யஞ் (4.1.105) க³ார்க்³ய:,க³ார்க்ய+ப²க்=க³ார்க்³யாயண:

இஞந்த தாக்ஷாயண: (தக்ஷ+இஞ்), ப்லாக்ஷாயண:

**4.1.102** ஸ'ரத்³வச்சு²னக³ாப⁴ர்த் ப்⁴குருவத்ஸாக்³ராயணேஷு ஸ'ர த்வத், ஸு'னக, த³ர்ப⁴ ஆகிய சொற்கள் முறையே ப்⁴ருகு, வத்ஸ, ஆக்³ராயண ஆகியவர்களின் 'வழித்தோன்றல்' என்ற பொருளைச் சுட்டும்போது (அபத்ய என்ற பொருளில்) ப²க் ஒட்டு வரும்.

ஸ'ாரத்வதாயன: (ஸ'ரத்³வத்+ப²க்=ஆயன) பிருகுவின் வமிசத்தில் தோன்றியவன் ஆனால், ஸ'ாரத்³வத: (வேறு பொருளைக் குறிக்கும் போது 'அஞ்' ஒட்டோடு வரும்) ஸௌனகாய: (வத்ஸனின் வழித்தே ான்றல்) ஸௌனக: மற்றபொருளில்:

த3ார்ப4ாயண: ஆக்3ராயண வமிசத்தில் வந்தவன். த3ார்பி: மற்ற து.

**4.1.103** த்3ரோணபர்வத ஜீவந்தாத3ன்ய தரஸ்யாம்

'த்3ரோண' முதலிய பிராதிபதிகங்களுக்குப்பின் (கோத்ராபத்ய என்ற பொருளில்) 'ப2க்' ஒட்டு விருப்பாக வரும்.

த்3ரௌணாயன: த்3ரௌணி:

பார்வதாயன:, பார்வதி: ஜைவந்தாயன:, ஜைவந்தி:

**4.1.104** அன்ருஷ்யானந்தர்யே பி3த3ாதி3ப்யோ அஞ்

'பி3த்3' முதலிய சொற்களுக்குப்பின் (கோத்ராபத்ய என்ற பொ ருளில்) 'அஞ்' ஒட்டு வரும். ஆனால், இவ்வகுப்பைச் சேர்ந்த பழங்கால இருடிகளின் பெயரைக் குறிக்காத சொற்களோடு 'அஞ்' ஒட்டுச் சேர்ந்துத் தருவிக்கப்படுஞ் சொற்கள் அடுத்த/உடனடியான சந்ததியைக் குறிக்கும்.

காட்டாக, பி3த 3 வகுப்பைச் சேர்ந்த 'புத்ர' (மகன்), து3ஹித்ரு (மகள்) முதலிய சொற்கள் இருடிகளின் பெயரல்ல. ஆகையால் புத்ர+அஞ்=பௌத்ர: 'பேரன்' பிள்ளையின் மகன்' து3ஹித்ரு+அஞ்=தெ3ௌஹித்ர: 'பேரன்' அதாவது பெண்ணின் மகன்'

ஆனால் இருடிகளின் பெயரைச் சுட்டும் மற்ற சொற்களோடு 'அஞ்' ஒட்டு இணைத்துத் தருவிக்கப்பட்ட சொற்கள் கோத்ரசந்ததியைக் குறிக்கும்.

பி3த்3+அஞ்=பை3த: 'பிதனின் பேரன்' அல்லது பேரனுக்கடுத்த சந்ததி

**4.1.105** க3ர்க3ாதி3ப்4யோ யஞ்

(கோத்ராபத்யம் என்ற பொருளில்) 'க3ர்க3' முதலிய சொற்களுக்குப்பின் 'யஞ்' ஒட்டு வரும்.

க3ார்க்3ய:– 'கர்கனின் பேரன் அல்லது அதற்கடுத்த சந்ததி' வாத்ஸ்ய:

**4.1.106** மது4 ப3ப்4ர்வோர் ப்3ராஹ்மண கௌஸிகயோ:

மது4, ப3ப்4ரு என்ற சொற்களோடு முறையே 'பிராம்மணன்', 'கௌஸிக என்று குறிக்கும்போது 'யஞ்' ஒட்டு (கோத்ராபத்ய என்ற பொருளைச் சுட்ட) இணைக்கப்படும்.

மாத4வ்ய: 'பிராம்மணன்'

மற்றது, மாத4வ: (மது4+அண்)

ப3ாப்4ரவ:– கௌசிகன் மற்றது ப3ாப்4ரவ:

**4.1.107** கபிபோ3த4ாத3ாங்கி3ரஸ:

கபி, போ3த4 ஆகிய சொற்களோடு 'யஞ்' ஒட்டு, ஆங்கிர3ஸ (கோத்ர அபத்ய என்ற பொருளைச் சுட்ட) இணைக்கப்படும்.

காப்ய:– 'கபியின் பேரன் அல்லது அதற்கடுத்த தலைமுறையில் தோன்றியவன். ஆங்கிரஸ வம்சத்தவன். மற்றது காபேய: பெ3ௗத்4ய: மற்றது பெ3ௗதி4

**4.1.108** வதண்ட3ாஸ்1 ச

(ஆங்கி3ரஸே) 'வதண்ட3' என்ற சொல்லுக்குப்பின் (கோத்ரஎன்ற பொருளில் 'யஞ்' ஒட்டு வரும்.

வாதண்டய: (அங்கிரசன் வழிவந்தவனனால்)

வாதண்ட மற்ற இடங்களில்.

**4.1.109** லுக் ஸத்ரியாம்

'வதண்ட' என்ற சொல்லுக்குப்பின் (அங்கிரசன் வழிவந்த என்ற குறிக்கும்போது) வரும் 'யஞ்' ஒட்டு, பெண்பாலில், கெடும் (லுக்) வதண்டீ3 (வதண்ட3+ஙீன்) 'லுக்' ஆவதால், இச்சொல் ஸாரங்கரவ வகுப்பைச் சேர்ந்ததால், 'ஙீன்' ஒட்டு வரும்.

மற்ற வடிவம், வாதண்ட3ாயனீ

வாதண்டீ3 (ஸிவாதி வகுப்பைச் சேர்ந்தது)

**4.1.110** அஸ்'வாதி3ப்யோ 'பஞ்'

'அஸ்'வ' முதலியவைகளுடன் (கோத்ராபத்ய என்ற பொருளைச் சுட்ட) ப2ஞ்' ஒட்டு வரும்.

ஆஸ்'வாயன:, ஆஸ்'மாயன:

வா: ஆத்ரேய ப4ாரத்3வாஜே

ஆத்ரேயாயன ப4ாரத்3வாஜ, கோத்ரத்தைச் சேர்ந்தவனானால், இல்லாவிட்டால் ஆத்ரேயி:

**4.1.111** ப4ர்க3ாத் த்ரைக3ர்த்தே

'ப4ர்க3' வுக்குப்பின் 'ப2ஞ்' ஒட்டு, (த்ரைக3ர்த கோத்திரத்தைச் சேர்ந்தவன் என்ற பொருளில்) வரும்.

ப4ார்க3ாயண: 'த்ரைகர்தனின் பேரன் அல்லது அதற்கடுத்த தலைமுறையைச் சேர்ந்தவன்' மற்றது ப4ார்கி3:

**4.1.112** ஸி'வாதி3ப்யோ அண் 'ஸிவ' முதலிய சொற்களுக்குப்பின் (அவன் மகன் அல்லது வழித்தோன்றல் என்ற பொருளில்) 'அண்' ஒட்டு வரும். ஸை'வ: 'சிவனுடைய மகன்' அல்லது அவ்வமிசத்தில் வந்தவன்.

**4.1.113** அவ்ரு'த்3த4ாப்4ய: நதீ மானுஷிப்4யஸ் தன்னாமிகாப்4ய:

வ்ருத்3த4ச் சொற்களல்லாத (வ்ருத்3த4 என்று குறிப்பிடும் சொற்களுக்கு பார்க்க 1.1.73) நதீ, மனிதர்களின் பெயர்களைக் குறிக்கும் சொற்களுக்குப்பின் 'அபத்ய' என்ற பொருளில் 'அண்' ஒட்டு வரும்.

யாமுன : 'யமுனையின் மகன்'

ஐராவத : 'இராவதியின் மகன்'

ஸைக்ஷித : 'ஸிக்ஷிதையின் மகன்'

ஆனால் சாந்த்3ரப4ாகே3ய:– 'சாந்த்ர ப4ாகாவின் மகன். 'சாந்த்3ர பாகா என்ற சொல் ஒரு 'வ்ருத்த'ச் சொல், அதாவது இச்சொல்லின் முதலசை விருத்தியாக அமைகிறது.

**4.1.114** ருஷ்யந்த4க வ்ருஷ்ணி குருப்4யஸ்' ச

ஒரு இருடியின் பெயரைக் குறிக்கும் சொற்களுக்குப்பின்னும், அந்த4க, வ்ருஷ்ணி குரு ஆகிய வமிசத்தில் தோன்றியவனின் பெயருக்குப்பின்னும் (அபத்ய என்ற பொருளில், 'அண்' ஒட்டு வரும்.

வாஸிஷ்ட2; 'வசிஷ்டரின் மகன்'

வைஸ்'வாமித்ர; 'விசுவாமித்திரனின் மகன்'

அந்தக ஸ்'வாப2ல்க:, ' ராந்த4ஸ

வ்ருஷ்ணி வாஸுதேவ:, ஆனிருத்3த:

குரு நாகுல:, ஸாஹதேவ

**4.1.115** மாதுருத் ஸம்க்2யாஸம் ப4த்3ர பூர்வாயா:

எண், ஸம், ப4த்3ர ஆகியவைகள் முதலில் நின்று அதைத் தொடர்ந்து வரும் 'மாத்ரு' என்ற சொல்லோடு 'அண்' ஒட்டு (அபத்ய என்ற பொருளைச் சுட்டும் போது) வரும். 'மாத்ரு' என்ற சொல்லின் னிறுதி 'ரு'வுக்கு 'உ' ஆதேசமாகும்.

த்3வை மாதுர: (த்3விமாத்ரு+அண்)

இரண்டு தாய்களுடைய மகன்.

ஸாம் மாதுர: ப4ாத்3ர மாதுர:

**4.1.116** கன்யாயா: கனீன ச

'கன்யா' என்ற சொல்லோடு 'அண்' ஒட்டு (அபத்ய என்ற பொருளைச் சுட்டும்போது) வரும். அச்சொல் 'கனீன' என்ற ஆதேசம் பெறும்.

கானீன: (கன்யா+அன்) கன்னியின் மகன் 'கர்ணன், வ்யாசர்.'

**4.1.117** விகர்ணஸு'ங்க3ச்ச2க3லாத் வத்ஸ ப4ரத்3வாஜாத்ரிஷு

விகர்ண, ஸு'ங்க3, ச3கல ஆகிய சொற்களுக்குப்பின் 'அண்' ஒட்டு, முறையே வத்ஸ, ப4ரத்3வாஜ, அத்ரி ஆகியவர்களின் வமிசத்தில் தோன்றியவன் என்ற பொருளைச் சுட்டுமாறு வரும்.

வைகர்ண:– 'வத்ஸகுலத்தில் தோன்றியவன்'

வைகர்ணி : மற்ற குலத்தைச் சேர்ந்தவன்

ஸோங்க3: பாரத்வாஜ வமிசத்தில் தோன்றியவன்'

ஸௌங்கி:–மற்றவன்

ச2ாக3ல:– 'அத்ரி வமிசத்தவன்' ச2ாகலி: மற்ற வடிவம்.

**4.1.118** பீலாயா வா

'பீலா' என்ற சொல்லுக்குப்பின் 'அண்' ஒட்டு விருப்பாக (அந்த வமிசத்தைச் சேர்ந்தவன்' என்று பொருளில்) வரும்.

'பீலா' ஒரு பெண்பாற் சொல்லானதால் 'அண்' ஒட்டு இத்துடன் வரும் (4.1.113) ஆனால், இச்சொல் இரண்டு அசை கொண்டதால் 'அண்' வருவது 4.1.121 இன்படி தடையாகும். ஆகவே, இச்சூத்திரம் தேவைபாகிறது.
பைல:/பைலேய: 'பீலாவின் மகன்'

**4.1.119** ட$^4$க்ச மண்டு$^3$காத்

'மண்டுக' என்ற சொல்லுக்குப்பின் 'ட$^4$க்' ஒட்டு (அபத்ய என்ற பொருளில்) வரும் 'அண்'ணும் வரும் என்ற 'ச' சுட்டும்.
(1) மாண்டுகேய: (மண்டு$^3$க+ட$^4$க்)
(2) மாண்டு$^3$க: (மண்டு$^3$க+அண்)
(3) மாண்டு$^3$கி: (மண்டு$^3$க+இஞ்)

**4.1.120** ஸ்த்ரீப்$^4$யோ ட$^4$க்

பெண்பால் ஒட்டுக்களில் முடியும் சொற்களோடு 'ட$^4$க்' ஒட்டு (அபத்ய என்ற பொருளில்) இணைக்கப்படும். ஸைனபர்ணேப்$^4$ய: ('ஸுபர்ணா என்ற பறவையின் மகன்' 'ஸ்த்ரீ' என்ற சொல், 'டாப்' முதலிய பெண்பால் ஒட்டுக்களைக் குறிக்கும். ஆனால், இட$^3$விட$^3$,த$^3$ரவ ஆகியவைகள் பெண்பாற்சொற்களான போதிலும் இவைகள் பெண்பாலொட்டையீறாகக் கொண்டவையல்ல ஆகையால், இவைகளோடு 'அண்' ஒட்டு வரும்.
ஐட$^3$விட$^3$:, தா$^3$ரவ:
வா: வட$^3$வாயா வ்ருஷே வாச்யே
பெண் குதிரையின் ஆண்குதிரை என்ற பொருளில் 'ட$^3$க்' வரும். அதாவது அதைச் சினையாக்கியது என்ற கூறும்போது, 'வட$^3$வா' என்ற சொல்லுடன் 'இக்' ஒட்டு வரும்.
வாட$^3$வேய:
ஆனால் 'அபத்ய' என்ற பொருளில் வாட$^3$வ என்று ஆகும். 'அண்' ஒட்டு இங்கு வரும்.

வா: அண் க்ருஞ்சா கோகிலாத்ஸ்ம்ருத:
க்ருஞ்சா, கோகிலா ஆகியவைகளுக்குப்பின் (அபத்யம் என்ற பொருளில்) 'அண்' ஒட்டு வரும்.
க்ரௌஞ்ச:, கௌகில:

**4.1.121** த்$^3$வ்யச:

பெண்பாலொட்டில் முடியும் பெண்பாற் சொற்கள் இரண்டசையைக் கொண்டதாக அமையும்போது 'ட$^4$க்' ஒட்டு வரும்.
தா$^3$த்தேய: (த$^3$த்தா + ட$^4$க்)
கௌ$^3$ளபேய: (கே$^3$ாபா + ட$^4$க்)
ஆனால் யாமுன: இது யமுனா என்ற மூன்றசைச் சொல்லிலிருந்து ஆக்கப்பட்டது. இங்கு 'அண்' தான் வரும்.

**4.1.122** இதஸ்'சானிஞ:

'இஞ்' ஒட்டு இறுதியில் நிற்காத 'இ'யீற்றுப் பிராதிபதிகம் ஈரசையைக் கொண்டதாக அமைந்து நிற்கும்போது அதற்குப் பின்னால் 'ட$^4$க்' ஒட்டு வரும். (அபத்ய என்ற பொருளில்)

ஆத்ரேய: (அத்ரி+ட$^4$க்)

நைதே$^3$யய: (நிதி$^4$+ட$^4$க்)

ஆனால் த$^3$ாக்ஷி:, ப்லாக்ஷ: ('அ'யீற்றுச் சொற்களான த$^3$க்ஷ, ப்லக்ஷ என்பதிலிருந்து 'இஞ்' ஒட்டிணைத்துப்பெறப்படுகிறது) த$^3$ாக்ஷாயண:, ப்லாக்ஷாயண:

('இஞ்' ஒட்டு இறுதியில் நிற்கும் சொற்களிலிருந்து ஆக்கப்பட்டவை)

**4.1.123** ஸுப்$^4$ராதி$^3$ப்$^4$யஸ் ச

'ஸுப்$^4$ர' முதலியவைகளுக்குப்பின் 'ட$^4$க்' ஒட்டு வரும் (அபத்ய என்ற பொருளில்)

ஸெப்$^4$ரேய:

இந்த வகுப்பில் குறிப்பிடப்படாத வேறு சில சொற்களும் இவ்வொட்டிணைத் தாக்கப்படுமென்று 'ச' (சூத்திரத்தில்) குறிக்கும். காட்டாக, க$^3$ாங்கே$^3$ய:; பாண்ட$^3$வேய:

**4.1.124** விகர்ண குஷுதகாத் காஸ்'யபே:

விகர்ண, குஷீத ஆகிய சொற்களுக்குப்பின் காஸ்யப, (வமிசத்தில் தோன்றியவன்) என்ற பொருளில் 'ட$^4$க்' ஒட்டு வரும்.

வைகர்ணேய:, கௌஷீதகேய :

ஆனால் வைகர்ணி:, கௌஷீதகி:

**4.1.125** ப் ருவோ வுக்ச

'ப்$^4$ரு' வோடு (அபத்ய என்ற பொருளில்) 'ட$^4$க்' ஒட்டு வரும். அதைச் சேர்க்கும்போது 'வுக்' வரும்.

ப்$^4$ரு + ட$^4$க் = ட$^4$ = ஏய = ப்$^4$ரௌ + ஏய, வுக் = வ்,

ப்$^4$ரௌ + வ் + ஏய: = ப்$^4$ ரௌவேய:

**4.1.126** கல்யாண்யாதீ$^3$னாமினங்

'கல்யாணி' முதலிய சொற்களுக்குப்பின் (அபத்ய என்ற பொருளில்) 'ட$^4$க்' ஒட்டு வரும். 'இனங்' அவ்வொட்டைச் சேர்க்கும்போது வரும்.

கல்யாணினேய:, ஸௌப$^4$ாகி$^3$னேய:

**4.1.127** குலட'ாயா வா

'குலட'ா' என்ற சொல்லோடு (அபத்ய என்ற பொருளில்) 'ட$^4$க்' ஒட்டு வரும். 'இனங்' ஆதேசம் விருப்பாக வரும்.

கௌலடி'னேய:/கௌலடே'ய:

'கெட்டநடத்தையுள்ளவளின் மகன்'

கௌலடேர: என்ற மூன்றாவது வடிவமும் 4.1.131 இன்படி பெறும்.

**4.1.128** சட1காயா: ஐரக்

'சட1கா' என்ற சொல்லோடு (அபத்ய என்ற பொருளில்) 'ஐரக்' ஒட்டு வரும்

சாட1கைர:

வா: சட1காத்ச இதி வக்தவ்யம் ஆண்பாற் சொல்லான 'சட1க'வு க்குட் பின்னும் இவ்வொட்டு வரும். சாட1கைர;

வா: ஸ்த்ரியாம் அபத்யே லுக் வக்தவ்ய; சந்ததி, ஒரு பெண்ணாக அமையும்போது இவ்வொட்டு கெடும்.

சட1கா – 'சடகாவின் மகள்'

**4.1.129** கோ3தா4யா ட்4ரக்

'கோ3தா4'வுக்குப்பின் (அபத்ய என்ற பொருளில்) 'ட்4ரக்' வரும்.

கௌ3தே4ர: அல்லது கௌதே4ய: (பார்க்க 4.1.123)

**4.1.130** ஆரகு3தீ3சாம்

'கோ3தா4'வுக்குப்பின் அபத்ய என்ற பொருளில்) 'ஆரக்' ஒட்டு வருமென்பது வடக்கத்திய இலக்கணகாரர்களின் கருத்து

கௌ3த4ார: (கோ3தா4+ஆரக்)

**4.1.131** க்ஷுத்3ராப்4யோ வா

கீழ்த்தரமான பொருளைச் சுட்டும் சொற்களுக்குப்பின் (அபத்ய என்ற பொருளில்) 'ட்4ரக்' விருப்பாக வரும். 'க்ஷுத்3ர' என்ற சொல், அவயவத்தில் குறையுள்ள அல்லது நடத்தைகெட்ட என்ற பொருளைக் குறிக்கும்.

காணேர: (காண+ட்ரக்) / காணேய:

'ஒரு கண்குருடானவளின் மகன்'

தா3ஸேர:/தா3ஸேய: 'அடிமையின் மகன்'

**4.1.132** பித்ருஷ்வஸுஶ்1ச2ண்

'பித்ருஷ்வஸ்ரு' என்ற சொல்லோடு (அபத்ய என்ற பொருளில்) 'ச2ண்' ஒட்டு வரும்.

பைத்ருஷ்னவஸ்ரீய: – 'தந்தையின் சகோதரியின் மகன்'

**4.1.133** ட4கி லோப:

'பித்ருஷ்லஸ்ரு' என்ற சொல்லோடு (அபத்ய என்ற பொருளில்) 'ட4க்' ஒட்டு வரும்போது அச்சொல்லின் இறுதியிர் கெடும்.

பைத்ருஷ்வஸேய:

**4.1.134** மாத்ருஷ்வஸுஶ்1 ச

'மாத்ருஷ்வஸு' என்ற சொல்லோடும் மேற்சூத்திரத்தில் கூறப்பட்ட ஒட்டுக்கள் வரும். மாத்ருஷ்வஸ்ரீய:,
மாத்ருஷ்வஸேய.

**4.1.135** சதுஷ்பாத்$^{3}$ப்$^{4}$யோ ட$^{4}$ஞ்,
நான்கு கால்கள் கொண்டவைகளின் பின் (அபத்ய என்ற பொருளில்) 'ட$^{4}$ஞ்' ஒட்டு வரும்.
காமண்ட$^{3}$லேய

**4.1.136** க்$^{3}$ருஷ்ட்யாதி$^{3}$ப்$^{4}$யஸ்ச
'க்$^{3}$ருஷ்டி' முதலிய சொற்களுக்குப்பின்னும் (அபத்ய என்ற பொருளில்) 'ட$^{4}$ஞ்' ஒட்டு வரும்.
க$^{3}$ார்ஷ்டே'ய:

**4.1.137** ராஜஸ்'வஸு'ராத்$^{3}$யத்
ராஜன், ஸ்'வஸு'ர என்ற சொற்களோடு (அபத்ய என்ற பொருளில்) 'யத்' ஒட்டு வரும்.
ராஜன்ய: 'க்ஷத்திரிய குலத்தைச் சேர்ந்தவன்'
ஸ்வஸுர்ய: 'மாமனாரின் மகன்'

வா: ராக்$^{3}$ஞோ அபத்யே ஜாதிக்ரஹணம்
'அரசனுடைய மகன்' என்ற பொருளைக் குறிக்க 'ராஜன்' என்று ஆகும்.

**4.1.138** க்ஷத்ராத்$^{3}$ க$^{4}$:
'க்ஷத்ர' என்ற சொல்லோடு (அபத்ய என்ற பொருளில்) 'க$^{4}$' ஒட்டு வரும்.
க்ஷத்ரிய; (க்ஷத்ர+க$^{4}$:) 'க்ஷத்திரியன்' மற்றது
க்ஷாத்ரி:

**4.1.139** குலாத் க$^{2}$:
'குல' என்ற சொல்லுக்குப்பின்னும், அச்சொல்லிறுதியுறுப்பினராக அமையும் ஒரு தொகைக்குப்பின்னும் ('அபத்ய' என்ற பொருளில்) க$^{2}$: என்ற ஒட்டு வரும்.
குலீன: (குல+க$^{2}$:=ஈன) 'உயர்ந்த குலத்தில் பிறந்தவன்' ஆட்$^{3}$யகுலீன:,
க்ஷத்ரிய குலீன:

**4.1.140** ஆபூர்வ பத$^{3}$ாதன்ய தரஸ்யாம்யட்$^{3}$ட$^{4}$க ஞௌ.
'பதம்' என்ற பெயரால் அழைக்கப்படும் சொல் 'குல' என்ற சொல்லுக்கு முன்பு நிற்காமலிருந்தால் 'குல' என்ற சொல்லோடு 'யத், ட$^{4}$கஞ்' ஆகியவைகள் விருப்பாக (அபத்ய என்ற பொருளைக் குறிக்க) வரும்.
குல்ய: (குல+யத்) கௌலேய (குல+ட$^{3}$கஞ்) ஆனால் 'ப$^{3}$ஹு' என்ற சொல் ஒரு பதம் ஆகாததால் இதனுடன் வரும் 'குல' என்ற சொல்லைத் தொடர்ந்து

இவ்வொட்டுக்கள் வரும்.
ப$^3$ஹுகுல்ய:, பா$^3$ஹுகுலேயக:, ப$^3$ஹுகுலீன:

**4.1.141** மஹாகுலாத$^3$ஞ் க$^2$ஞௌ
'மஹாகுல' என்ற சொல்லோடு, 'அஞ்', 'க$^2$ஞ்' ஒட்டுக்கள் விருப்பாக வரும்.
மாஹாகுல: (மஹாகுல+அஞ்) மாஹாகுலீன: (மஹாகுல+க$^2$ஞ்) மஹாகுலின: (மஹாகுல + க$^4$ = ஈன)

**4.1.142** து$^3$ஷ்குலாட்$^3$ட$^4$க்
'து$^3$ஷ்குல' என்ற சொல்லுக்குப் பின் (அபத்ய) என்ற பொருளில்) 'ட$^4$க்' ஒட்டு விருப்பாக வரும்.
தெ$^3$ளஷ்குலேய:, து$^3$ஷ்குலீன:

**4.1.143** ஸ்வஸுஸ்' ச$^2$
'ஸ்வஸ்ரு' என்ற சொல்லுக்குப்பின் (அபத்ய என்ற பொருளைச் சுட்டும்போது) 'ச$^2$' ஒட்டு வரும்.
ஸ்வஸ்ரீய: 'சகோதரியின் மகன்'

**4.1.144** ப்$^4$ராதுர் வ்யச் ச
'ப்$^4$ராத்ரு' என்ற சொல்லோடு (அபத்ய என்ற பொருளில் 'வ்யத்' என்ற ஒட்டு வரும். 'ச$^2$'வும் (ச) வரும்.
ப்$^4$ராத்ருவ்ய:, ப்$^4$ராத்ரீய : 'சகோதரனின் மகன்'

**4.1.145** வ்யன் ஸபத்னே
'ப்$^4$ராத்ரு' என்ற சொல்லுக்குப்பின் 'வ்யன்' ஒட்டு 'பகைவன்' (ஸபத்ன) என்ற பொருளைச் சுட்டும்போது இணைக்க வேண்டும்.
ப்ராத்ருவ்ய;

**4.1.146** ரேவத்யாதி$^3$ப்$^4$யஷ்ட$^2$க்
'ரேவதீ' முதலிய சொற்களுக்குப்பின் (அபத்ய என்ற பொருளில்) 'ட$^2$க்' ஒட்டு வரும்.
ரைவதிக: (ரேவதீ+ட$^2$க்=இக) ஆஸ்'வபாலிக:

**4.1.147** கே$^3$ாத்ரஸ்த்ரியா: குத்ஸனேண ச
கோத்ர சந்ததியைக் குறிக்கும் பெண்பாற் சொற்களுடன், 'இகழ் ந்து பேசுதல்' என்ற பொருளில் (அபத்யத்தைச் சுட்ட) 'ண' ஒட்டு ம் வரும். 'ட$^2$க்' ஒட்டும் வரும் (ச)
'ட$^2$க்' ஒட்டும் வரும் (ச)
கா$^3$ர்$^3$க: (கா$^3$ர்கீ$^3$+ண=அ)
கா$^3$ர்கிக: (கா$^3$ர்க்$^3$+ட$^2$க்=இக)

'முறை தவறிப் பிறந்த 'கார்கீ'யின் மகன்'

**4.1.148** வ்ருத்3த4ாட்ட2க் ஸௌவீரேஷு

(இகழ்ந்து பேசுதல் என்ற பொருளில்) அக்குலத்தின் வழித்தோன்றல் என்று சுட்டும் 'வ்ருத்3த4' சொல்லோடு, 'ட2க்' ஒட்டு, பலவகையில் ஸௌவீர கோத்திரத்தைச் சேர்ந்தவன் என்ற பொருளில் வரும்.

ப4ாக3வித்திக: (ப4ாக3வித்தி+ட2க்)

அல்லது ப4ாக3 வித்தாயன: (ப4ாக3வித்தி+ப2க்)

கர்ணவிந்தி3க: அல்லது கர்ணவிந்த3வீ:

**4.1.149** பே2ஸ்1 ச2 ச

இகழ்ந்து பேசுதல் என்ற பொருளில் 'பி2ஞ்' ஒட்டினைத் தாக்கப்பட்ட (ஸௌவீர கோத்திரத்தில் தோன்றியவன் என்ற பொருளைச் சுட்டும்) சொல்லுக்குப்பின் ச2 ஒட்டும் (ட2க் ஒட்டும்) வரும்.

யாமுந்தாயனீய: அல்லது யாமுந்த3ாயனிக: 'யாமுந்தாயனியின் மகன்'

யமுந்த+பி2ஞ்=யாமுந்த3ாயனி: (4.1.154)

ஆனால், யாமுந்த3ாயனி: – யாமுந்தாயனியின் மகன் (இகழ்ச்சியாகக் கூறாவிட்டால், அண்' ஒட்டோடு இச்சொல்லாக்கப்படும்)

**4.1.150** ப2ாண்ட3ாஹ்ருதி மிமதாப்4யாம் ண பி2ஞௌ

ப2ாண்ட3ாஹ்ருதி, மிமத; ஆகிய சொற்களோடு (ஸௌவீர கோத்திரத்தில் தோன்றியவன் என்ற பொருளில்) ண, பி2ஞ் ஒட்டுக்கள் இணைக்கப்படும்.

ப2ாண்ட2ாஹ்ருத: அல்லது ப2ாண்ட2ாஹ்ருதாயனி:, மைமத: அல்லது மைமதாயனி:

ஆனால் ப2ாண்ட2ாஹ்ருதாயன:

அல்லது மைமதாயன: (ஸௌவீரவழி வந்தவனல்ல)

**4.1.151** குர்வாதி3ப்4யோ ண்ய:

'குரு' முதலிய சொற்களோடு (அபத்ய என்ற பொருளில்)

'ண்ய' ஒட்டு இணைக்கப்படும்.

கௌரவ்ய: (குரு+ண்ய=ய), க3ார்க்3ய:

'குரு' என்ற சொல்லை சூ.4.1.172 இன்படியும் 'ண்ய' ஒட்டோடு இணைத்து, 'கௌரவ்ய' என்ற சொல்லாக்கப்படும். ஆயினும் இவ்விரண்டுக்கும் ஒரு வேறுபாடு உண்டு. 4.1.172 இல் கூறப்பட்ட 'ண்ய' ஒட்டு 'தத்ராஜ' ஒட்டு (பார்க்க 2.4.64) ஆகையால், இச்சொல்லின் பன்மையில் இவ்வொட்டு கெடும். கௌரவ்ய: ஆனால், இ.4.1.151 இன் மூலம் ஆக்கப்பட்ட சொல்லின் பன்மையில் இவ்வொட்டு மறையாது. கௌரவ்யா: 'கௌரவ்ய' க்ஷத்திரியனைக் குறிக்கும்போது 'திக' வகுப்பைச் சேர்ந்தது. ஆகையால், இத்துடன் 'பி2ஞ்' ஒட்டும் வரும். கௌரவ்யாயணி;

**4.1.152** ஸேனாந்தலக்ஷண காரிப்$^4$யஸ்$^1$ ச

'ஸேனா' என்ற சொல்லையிறுதியாகக் கொண்ட பிராதி பதிகங்களோடும், 'லக்ஷண' 'கைவினைஞர்' என்ற பொருளைச் சுட்டும் சொற்களோடும் (அபத்ய என்ற பொருளில்) 'ண்ய' ஒட்டு வரும்.

காரிஷேண்ய: (கரிஷேண+ண்ய) லாக்ஷண்ய:

<u>காரி</u> : தாந்துவாய்ய: 'நெசவாளியின் மகன்'

கௌம்ப$^4$கார்ய: – 'குயவனின் மகன்'

**4.1.153** உதீசாமிஞ்

(மேலே குறிப்பிட்ட சொற்களுக்குப்பின் அதே பொருளில்) வடக்குதேச இலக்கண ஆசிரியர்களின் கருத்துப்படி 'இஞ்' ஒட்டு வரும்.

காரிஷேணி:, லாக்ஷணி:, தாந்துவாயி:

**4.1.154** திகாதி$^3$ப்$^4$ய:பி$^2$ஞ்

'திக' முதலிய சொற்களோடு (அபத்ய என்ற பொருளில்) பி$^2$ஞ் ஒட்டு இணைக்கப்படும்.

தைகாயனி: (திக+பி$^2$ஞ்=ஆயன்)

கைதவாயனி:(கிதவ+பி$^2$ஞ்)

**4.1.155** கௌஸல்யகார்மார்யாப்$^4$யாம் ச

கௌஸல்ய, கார்மார்ய ஆகியவைகளோடும் (அபத்ய என்ற பொருளைக் குறிக்கும்போது) 'பி$^2$ஞ்' ஒட்டு வரும்.

கௌஸல்யாயனி:, கார்மார்யாயணி:

இச்சொற்கள், கௌஸல்ய; கார்மார்ய ஆகியவர்களின் மகன் என்ற பொருளைச் சுட்டாமல், கோஸல, கர்மாரவின் மகன் என்ற பொருளைக் குறிக்கும். இது தொடர்ந்து வரும் வார்த்தி கத்தில் விளக்கப்பட்டுள்ளது.

வா: த$^3$கு$^3$ கோஸல கர்மாரச்ச$^2$ாக$^3$வ்ருஷாணாம் யுட்$^3$ வாதி$^3$ஷ்ய

த$^3$கு$^3$ முதலிய சொற்களோடு வருமென்று விதிக்கப்பட்ட 'பி$^2$ஞ்' உக்கு 'யுட்' ஆகமமாகும்.

தா$^3$க$^3$வ்யாயனி: (த$^3$கு$^3$+பி$^2$ஞ்=ஆயன், யுட்=ய்)

கௌஸல்யாயனி:, கார்மார்யாயனி:, ச$^2$ாக்$^3$யாயணி:, வார்ஷ்யாயணி:

**4.1.156** அணோ த்$^3$வ்யச:

'அண்' ஒட்டில் முடியும் இரண்டு உயிர்களைக் கொண்ட (ஈரசை) சொற்களோடு (அபத்ய என்ற பொருளில்) 'பி$^2$ஞ்' வரும்.

கார்த்ராயணி: (கர்த்ரு+அண்=கார்த்ர+பி$^2$ஞ்)

வா: த்யத$^3$ாதீனாம் வா பி$^2$ஞ் வக்தவ்ய:

'த்யத்' முதலியவைகளோடு 'பி$^2$ஞ்' விருப்பாக வரும்.

த்யாத³ாயனி:, அல்லது த்யாத³:

**4.1.157** உதீ³சாம் வ்ருத்³த⁴ாத³கோத்ராத்

'கோத்ர'த்தைக் குறிக்காத 'வ்ருத்³த⁴'மல்லாத சொற்களுக்குப் பின் 'பி²ஞ்' ஒட்டு (அபத்ய என்ற பொருளில்) வரும். ஆம்ரகு³ப்தாயனி:க்³ராமரக்ஷாமணி: நாபிதாயனி: ஆனால் மற்றவர்களின் கருத்துப்படி ஆம்ரகு³ப்தி: (இஞ்)

4.1.158 வாகினாதீ³னாம் குக்ச

(வடக்கத்திய இலக்கணகாரர்களின் கருத்துப்படி) வாகின முதலிய சொற்களோடு (அபத்ய என்ற பொருளில்) 'பி²ஞ்' ஒட்டு வரும். 'குக்'உம் அதனுடன் வரும்.

வாகின காயனி: (வாகின+பி²ஞ்=ஆயனி, குக்=க், வாகினக்+ஆயனி)

க³ாரேத⁴காயனி:

மாற்று வடிவம், வாகினி:

**4.1.159** புத்ராந்தாத³ன்யதரஸ்யாம்

'புத்ர' என்ற சொல்லிறுதியில் நிற்கும்போது 'பி²ஞ்' ஒட்டுக்குப்பின் மேலே விதிக்கப்பட்ட 'குக்' ஆகமம் விருப்பாக வரும்.

இங்கு 3 வடிவங்கள் ஆகும். (1) க³ார்கீ³ புத்ரகாயணி: (2) க³ார்கீ³ புத்ராயணி: (3) க³ார்கீபுத்ரி:

**4.1.160** ப்ராசாமவ்ருத்³த⁴ாத் பி²ன் பஹுலம்

கிழக்கத்திய இலக்கண ஆசிரியர்களின் கருத்துப்படி, 'வ்ருத்த மல்லாத சொற்களோடு (அபத்ய என்ற பொருளில்) 'பி²ன்' ஒட்டு பலவிதமாக வரும்.

க்³லுசுகாயனி:

க்³லௌ சுகி: (மற்றவர்களின் கருத்துப்படி)

**4.1.161** மனோர் ஜாதாவஞ்யதௌ ஷுக் ச

'மனு' என்ற சொல்லோடு 'அஞ்'. 'யத்' என்ற ஒட்டுக்கள் வரும். இவ்வொட்டுக்கள் தொடரும்போது 'ஷுக்' ஆகமமாகும். இவ்வாறு தருவிக்கப்பட்ட சொல் ஒரு இனத்தைக் குறிக்கும்.

மானுஷ: (மனு+அஞ், ஷுக்=ஷ்)

மனுஷ்ய: (மனு+யத், ஷுக்=ஷ்)

மனிதன் அல்லது மனித இனம்

இச்சொற்கள், 'அவன் வழிவந்தவன்' என்ற பொருளைச் சுட்டாது. ஏனென்றால் இச்சொற்களின் பன்மையில் இவ்வொட்டு மறையாது. அவனுடைய மகனென்ற பொருளைக் குறிக்க, 'மனு' வோடு 'அண்' ஒட்டு வரும். மனு+அண்=மானவ: 'மனுவின் மகன்'

**4.1.162** அபத்யம் பௌத்ர ப்ரப்⁴ருதி கோத்ரம்

பேரனிடமிருந்து தொடங்கி, அவனையடுத்துத் தோன்றும் சந்ததிகளுக்குக்

'கோத்ரம்' என்ற பெயர்.
க$^{3}$ர்க$^{3}$ : தகப்பன் பெயர்
க$^{3}$ார்கி$^{3}$: கர்கனின் மகன்
க$^{3}$ார்க்$^{3}$ய: கர்கனின் பேரன். 'கர்கன்' சம்பந்தமாக, க$^{3}$ார்க்$^{3}$யன் 'கோத்ரம்' ஆவான். ஆனால், கார்கி, கோத்ரம் என்றழைக்கப்படமாட்டான்.

**4.1.163** ஜீவதி து வம்ஸ்'யே யுவா.
ஒரு வம்சாவளியில் (அதாவது தந்தை, அவன் மகன், அவன் பேரன், பேரனுடைய மகன்....) தந்தை முதலியவர்கள் உயிருடனிருந்தால், அவனுடைய பேரனையடுத்து வரும் சந்ததிகளுக்கு 'யுவன்' என்ற பெயர்.
க$^{3}$ார்க்$^{3}$யாபண:– கர்கனின் கொள்ளுப்பேரன்
க$^{3}$ர்க$^{3}$: –தந்தை
கார்கி: –மகன்
அபத்யம் க$^{3}$ார்க்$^{3}$ய:– பேரன் – (கோத்ர)
க$^{3}$ார்க்$^{3}$யாயண:– கொள்ளுப்பேரன் (யுவன்) (க$^{3}$ர்க$^{3}$ அல்லது க$^{3}$ா ர்கி$^{3}$ ஆகியவர்கள் உயிருடனிருந்தால்) 'யுவன்' என்றுதான் கூறப்படு ம், 'கோத்ர' அல்ல என்று இச்சூத்திரத்தில் நிற்கும் 'து' குறிக்கும்.

**4.1.164** ப்$^{4}$ராதரி ச ஜ்யாயஸி
தமையனார் உயிருடனிருந்தால் தம்பி 'யுவன்' என்ற பெயரை (மேற்சூத்திரத்தில் கூறியபடி பேரனையடுத்து வரும் தலைமுறையில் பிறந்தவனானால்) பெறுவான். 'தந்தை' முதலியவர்கள் (வம்ஸ்ய) இறந்துவிட்டிருந்தாலும், 'தம்பி' அவனுடைய தமையனார் உயிருடனிருந்தால் 'யுவன்' என்ற பெயரைப் பெறுவான்.
க$^{3}$ர்க$^{3}$: (இறந்தவன்)
க$^{3}$ார்க்$^{3}$ (இறந்தவன்)
க$^{3}$ார்க்ய: (இறந்தவன்)
க$^{3}$ார்க்$^{3}$ய: க$^{3}$ார்க்யாயண:
சகோதரன் 'வம்ஸ்ய' என்று அழைக்கப்படமாட்டான். தகப்பன், முதலியவர்கள்தான் 'வம்ஸ்ய' என்ற பெயரால் குறிப்பிடப்படுவார் கள். ஏனென்றால், அவர்கள்தான் அந்தக் குடும்பத்தின் மூல புருடனாவான். தமையனிடமிருந்து தம்பி தோன்றாததால், தமையன், தம்பி சம்பந்தமாக 'வம்ஸ்ய' ஆகமாட்டான். ஆகவே இச்சூத்திரம் 'வம்ஸ்ய'த்தைக் குறிக்காது.

**4.1.165** வான்யஸ்மின் ஸபிண்டே$^{3}$ஸ்த$^{2}$விரததே ஜீவதி
(தமையனாரல்லாத) மற்ற மூத்தவர்கள் (முந்திய தலைமுறையைச் சேர்ந்தவர்கள்) உயிரோடிருக்கும்போது, பேரனுக்கடுத்த தலைமுறையைச் சேர்ந்தவர்கள் விருப்பாக 'யுவன்' என்ற பெயரால் குறிப்பிடப்படுவார்கள். க$^{3}$ார்க$^{3}$யாயண: அல்லது க$^{3}$ார்க்$^{3}$ய: 'ஸபிண்ட' என்பது ஆண் வழியாக ஏழுதலைமுறையைச் சேர்ந்தவர்களைக் குறிக்கும். 'ஸ்தவிரதர' என்ற சொல்,

'மிகப்பெரியவர்' என்ற பொருளைக் கொடுக்கும். இது தலைமுறையாலும் வயதாலும் பெரியவர்களைக் குறிக்கும்.

க[3]ர்க[3] (இறந்தவன்)

கா[3]ர்கி[3] (உயிரோடிருப்பவன்)  கா[3]ர்கி[3] (இறந்தவன்)

கா[3]ர்க்[3]ய (உயிரோடிருப்பவன்)  கா[3]ர்க்[3]ய (இறந்வன்)

கா[3]ர்க்யாயண அல்லது கா[3]ர்க்[3]ய உயிரோடிருப்பவன்

**4.1.166** வ்ருத்3த[4]ஸ்ய ச பூஜாயாம்

மரியாதையுடன் குறிப்பிடும்போது 'கோத்ர'னை, 'யுவன்' என்ற சில சமயங்களில் விருப்பாகக் கருதப்படும். 'கோத்ர', 'வ்ருத்த' என்ற சொற்கள் ஒரே பொருளைக் கொண்டன. தவ ப[4]வான் கா[3]ர்க்[3]யாயண: அல்லது கா[3]ர்க்[3]ய: 'மதிப்புக்குரிய' கா[3]ர்க்யாயணர் அல்லது கார்க்ர் அவர்களே.

**4.1.167** யூனஸ்ய குத்ஸாயாம்

'இகழ்ந்து பேசுதல்' என்ற பொருளில், 'யுவன்' விருப்பாக 'கோத்ர' னாகப் குறிப்பிடப்படுவான்.

கா[3]ர்க்[3]யோ ஜால்ம: அல்லது கா[3]ர்க்[3]யாயணோ

ஜால்ம: இகழ்ச்சியாகக் குறிக்காவிட்டால் கார்க்யாயண:

**4.1.168** ஜனபத ஸ'ப்[3]த[3]ாத் க்ஷத்ரியாதஞ்

ஒரு நாட்டின் பெயரையும் அந்நாட்டின் க்ஷத்திரிய வகுப்பையும் குறிக்கும் சொல்லோடு (அபத்ய என்ற பொருளில்) அஞ் ஒட்டு வரும்.

பாஞ்சால:, பஞ்சால நாட்டு அரசனின் மகன்

ஐக்ஷ்வாக: இக்ஷ்வாகுவின் மகன்

வைதேஹ : விதேஹ

ஆனால் பௌரவ:, 'புருவின் மகன்' இது ஒரு நாட்டின் பெயரோடிணைந்த அரசனைக் குறிக்காமல் ஒரு க்ஷத்திரியனை மட்டும் குறிக்கிறபடியால் இங்கு 'அண்' ஒட்டு வருகிறது 'அஞ்' அல்ல.

ப[3]ராஹ்மணஸ்ய பஞ்சாலஸ்யாபத்யம்

பாஞ்சாலி: 'பஞ்சால நாட்டுப் பிராம்மணனின் மகன்' இங்கு க்ஷத் திரியனைக் குறிக்காததால் 'அஞ்' வராது.

வா: க்ஷத்ரியஸமானஸ'ப்[3]த[3]ாஜ்ஜன பத[3]ஸ'ப்[3]த[3]ாத் தஸ்ய ராஜன் பத்யவத்

ஒரு க்ஷத்திரியன் பெயரால் அழைக்கப்பட்ட ஒரு நாட் டைக் குறிக்கும் சொல்லோடு (அபத்ய என்ற பொருளில்) அதே ஒட்டு அரசனைக் குறிக்க இணைக்கப்படும்.

பாஞ்சால: 'பஞ்சால என்றழைக்கப்படும் க்ஷத்திரியர்களின் அரசன்' அல்லது 'பஞ்சாலநாட்டரசன்'

**4.1.169** ஸால்வேய க3ாந்த4ாரிப்யாம் ச

ஸால்வேய, க3ாந்த4ாரி ஆகியவைகளுக்குப் பின்னும் 'அஞ்' ஒட்டு வரும் (அபத்ய என்ற பொருளில்) இவ்விரண்டு சொற்களும், க்ஷத்திரியன், நாடு இரண்டையுமே குறிக்கும். ஆகையால் இவைகளோடு 'ஞ்யங்' ஒட்டு வரவேண்டும். (பார்க்க 4.1.171) ஆன ால், இச்சூத்திரம், 'அஞ்' ஒட்டு இவைகளோடு வரவேண்டுமென்று விதிக்கிறது. ஸால்வேய, ஸால்வேபனின் மகன் அல்லது ஸால்வேய ந ாட்டைச் சேர்ந்தவன்.

**4.1.170** த்3வயஞ் மக3த4 கலிங்க ஸூரமஸாதண்

க்ஷத்திரியனின் பெயராலழைக்கப்பட்ட ஒரு நாட்டின் பெயரைக் குறிக்கும் சொல் இரண்டுயிர்களைக் கொண்டதாக நிற்கும் போது, அதன் பின்னாலும், மகத கலிங்க ஆகியவைகளுக்குப்பிறகும் 'அண்' வரும். ஆங்க3: (அங்க), வாங்க3: (<-வங்க), பௌண்ட்ர:, காலிங்க:, ஸௌரமஸ: இவைகளும், அந்நாட்டரசன் அல்லது அப்பெயருள்ள க்ஷத்திரியனின் மகன் என்ற பொருளைச் சுட்டும்.

**4.1.171** வ்ருத்3தே4த் கோஸலாத3ாஞ் ஞ்யங்

க்ஷத்திரியனுடைய பெயரையும் அல்லது அவனுடைய பெயராலழைக்கப்பட்ட ஒரு நாட்டின் பெயரையும் குறிக்கும் சொற்கள், முதலசையில் 'விருத்தி'யுடையதாகவோ அல்லது 'இ'யீற்றுச் சொல்லாகவோ அல்லது கோஸல, அஜாத என்பவைகளோ இருக்குமானால், அவைகளோடு 'ஞ்யங்' ஒட்டு (அபத்ய என்ற பொருளில்) இணைக்கப்படும்.

ஆம்ப3ஷ்ட்2ய: (ஆம்ப3ஷ்ட2+ஞ்யங்) ஸௌவீர்ய:

ஆவந்த்ய: (அவந்தி+ஞ்யங்)

கௌந்த்ய: (குந்தீ+ஞ்யங்)

கௌஸல்ய:, ஆஜாத்3ய:

வா: பாண்டே3ார் ஜனபத3ஸ்ப்3தார் க்ஷத்ரியாட்3ட்3யண்

கத்திரியவும், நாட்டினுடையவுமான 'பாண்டு' என்ற சொல்லோடு 'ட்3யண்' ஒட்டு இணைக்க வேண்டும். பாண்ட்3ய: மற்றது பாண்டவ:

**4.1.172** குரு நாதி3ப்4யோ ண்ய:

க்ஷத்திரியனுடைய பெயரையும் அவன் பெயரைக் கொண்ட நாட் டையும் குறிக்கும் சொல்லான 'குரு', 'ந' வை முதலில் கொண்ட சொல் ஆகியவைகளோடு 'ண்ய' ஒட்டு (அபத்ய என்ற பொருளில்) இணைக்கப்படும்.

கௌரவ்ய: (குரு+ண்ய)

நைஷத்4ய: (நிஷத4+ண்ய:)

நைபத்4ய: (நிபத2+ண்ய:)

குரு நாட்டரசன், 'குரு' என்ற அரசனின் மகன் என்ற பொருட்களைக் குறிக்கும்.

**4.1.173** ஸால்வாவயவப்ரத்யக்3ரத2கல கூட1ாஸ்1ம காதி3ஞ்

ஸால்வ நாட்டின் ஒரு உட்பகுதியைக் குறிக்கும் சொல்லுக்குப் பின்னும், ப்ரத்யக்3ரத2, கலகூட1, அஸ்1மக, ஆகிய சொற்களோடும் (இவைகள் நாட்டின் பெயராகவும் க்ஷத்திரியனின் பெயராகவும் அமையும் போது) 'இஞ்' ஒட்டு (அபத்ய என்ற பொருளில்) இணைக்கப்படும்.

ஔது3ம்ப3ரி:, தைலக2லி:, மாத்3ரகாரி:,

யௌக3ந்த4ரி:, பௌலிங்கி3:, ஸ1ரத3ண்டி:

ஆகியவைகள், ஸால்வ நாட்டின் உட்பிரிவுகளான, முறையே உது3ம்ப3ர, திலக3ல, மத்3ரகாரா, யுக3ந்த2ர, பூ4லிங்க3, ஸ1ரதண்ட3 ஆகியவைகளோடு 'இஞ்' ஒட்டிணைத்துத் தருவிக்கப்பட்ட சொற்கள்.

ப்ராத்யக்3ரதி2, காலகூடி1:, ஆஸ்மகி:

**4.1.174** தே தத்3ராஜா

அவைகள் 'தத்3ராஜா' ஒட்டுக்கள் எனப்படும். 'அஞ்' முதலிய ஒட்டுக்கள் அதாவது 4.1.168 இலிருந்து 4.1.173 வரை விளக்கப்பட்ட ஒட்டு க்கள் 'அதன் அரசன்' (தத்3ராஜா) ஒட்டுக்கள் என்பவை.

இச்சூத்திரத்தில் காணப்படும் 'தே' என்ற சொல் சூ.168இலிருந்து கூறப்பட்ட ஒட்டுக்களை மட்டும் குறிக்கும். அதற்கு மூன்வு கூறியவைகள் 'கோத்ர' யுவன் என்ற பெயரால் ஏற்கெனவே சுட்டப்பட்டுள்ளன.

**4.1.175** கம்பே1ாஜால்லுக்

'கம்போஜ' என்ற சொல்லைத் தொடர்ந்து நிற்கும் 'தத்ராஜா' ஒட்டு கெடும் (லுக்) 'கம்போஜ' என்ற சொல், க்ஷத்திரியனின் பெயராகவும், நாட்டின் பெயராகவும் ஆகும். ஆகையால், இச்சொல்லுடன் 'அஞ்' ஒட்டு வந்திருக்க வேண்டும். இவ்வொட்டு கெடுகிறது. அதனால் கம்போஜ 'கம்போஜ அரசன்' என்றே இச் சொல்லாகும்.

வா: கம்பே1ாஜாதி3ப்4யோ லுக்3வசனம் சோலாத்3யர்த2ம் 'கம்போஜ' போன்றவைகளோடு வரும் 'அஞ்' ஒட்டு கெடுமென்றமைய வேண்டும் ஏனென்றால் 'சோல' முதலியவைகளுக்குப்பின் வரும் இவ்வொட்டு கெடுவதைக் காண்கிறோம்.

சோல: – 'சோலர்களின் அரசன்'

கேரல:, ஸ1க:

**4.1.176** ஸ்த்ரியாமவந்தி குந்தி குருப்4யஸ்' ச

தருவிக்கப்பட்ட சொல் பெண்ணின் பெயரைக் குறிக்கும் போது, அவந்தி, குந்தி, குரு ஆகியவைகளோடு வரும் 'தத்ராஜா' ஒட்டு கெடும். அதாவது, அவந்தி, குந்தி, ஆகியவைகளோடு வரும் 'ஞ்யங்' ஒட்டும் (4.1.171) குரு என்ற சொல்லோடு வரும் 'ண்ய' ஒட்டும் கெடும்.

அவந்தீ – 'அவந்தி நாட்டின் அரசகுமாரி'

குந்தீ – 'குந்தி நாட்டின் அரசகுமாரி'
குரு – 'குரு நாட்டின் அரசகுமாரி'

**4.1.177** அதஸ்' ச
ஆண்பாலில் 'அ'வில் முடியும் 'தத்ராஜா' சொல்லிலிருந்து, அதன் பெண்பாற் சொல்லாக்கும்போது அவ்வொட்டு கெடும். ஸௌ'ரஸேனீ (ஸௌரஸேன+அஞ்· அதனால், இச்சொல்லின் முதல் உயிர், விருத்தியாகாது, ஸௌரசேன+ஙீப்)

**4.1.178** ந ப்ராச்ய ப$^4$ர்க$^3$ாதி$^3$யௌதே$^4$யாதிப்$^4$ய:
கீழ்த்திசை க்ஷத்திரியர்களின் பெயர், ப$^4$ர்க$^2$, யௌதே$^4$ய ஆகிய சொற்கள், இவைகளின் பெண்பாலில், 'தத்$^3$ராஜா' ஒட்டு மறையாது.
மேற்சூத்திரத்தில் குறிப்பிட்ட 'லுக்' வருவதை, இச்சூத்திரம், இங்கு கூறப்பட்ட சொற்களோடு வருவதைத் தடை செய்கிறது.
வைதேஹீ, ஆங்கீ, வாங்கீ,
ப$^4$ார்கீ, கைகேயீ, யௌதே$^4$யீ,
விதேஹ முதலியவைகளுடன் வரும் 'அஞ்' ஒட்டு இங்கு கெடாது.

**4.2.1** தேன ரக்தம் ராக$^3$ாத்
நிறத்தைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின். 'அதனால் நிறப்படுத்தியது' (தேன ரக்தம்) என்ற பொருளைச் சுட்ட, 'அண்' (4.1.83) ஒட்டு இணைக்கப்படும். காஷாயம் – காவி நிறத்தால், அந்நிறப்படுத்திய துணி. இச்சூத்திரத்திலிருந்து தொடங்கி, சூ.12 வரை, கூறப்பட்ட ஒட்டுக்கள், மூன்றாம் வேற்றுமையிலமையுஞ் சொற்களோடு இணைக்க வேண்டும்.

**4.2.2** லாக்ஷா ரோசனா ஸ'கல கர்த$^3$மாட்ட$^2$க்
மூன்றாம் வேற்றுமையிலமையும் லாக்ஷா (அரங்கு), ரோசனா (மஞ்சள்), ஸ'கல (கருப்பு) கர்த$^3$ம (மண்) ஆகியவைகளுடன், 'ட$^2$க்' ஒட்டு (அதனால் நிறப்படுத்தியது என்ற பொருளில்) இணைக்கப்படும். லாக்ஷிகம், ரௌசனிகம், ஸாகலிகம், கார்த$^3$மிகம்.

வா: ஸ'கலகர்த$^3$மாப்$^4$யாமணபீஷ்யதே
ஸ'கல, கர்தம ஆகியவைகளுடன் அண் ஒட்டும் வரும்.
ஸ'ாகலம், கார்த$^3$மிகம்.

வா: நீல்யா 'அன்' வக்தவ்ய:
'நீலி' (நீலம்) என்ற சொல்லுடன் அதே பொருளில் 'அன்' ஒட்டு வரு ம்.
நீலம் வஸ்த்ரம்

வா: பீதாத் கன் வக்தவ்ய:
'பீத' (மஞ்சள்) என்ற சொல்லுடன் (அதே பொருளில்) 'கன்' ஒட்டு வரும்.

வா: ஹரித்[3]ரா மஹாராஜனாப்[4]யாமஞ் வக்தவ்ய:

ஹரித்[3]ரா, மஹாரஜன ஆகிய சொற்களோடு (அதே பொருளில்) 'அஞ்' ஒட்டு வரும்.

ஹாரித்[3]ரம், மாஹாரஜனம்

**4.2.3** நக்ஷத்ரேண யுக்த: கால:

மூன்றாம் வேற்றுமையுருபுகளுடன் சேர்ந்து நிற்கும், நட்சத்திரத்தின் பெயரைச் சுட்டும் சொல்லொடு, 'அண்' ஒட்டு சந்திரன் அந்ந ட்சத்திரத்துடன் சேர்ந்து நிற்கும் காலத்தைக் குறிக்க இணைக்கப்படும்.

பௌஷீ ராத்ரி: 'சந்திரன் புஷ்ய என்ற நட்சத்திரத்திலிருக்கும் இரவு'

பௌஷமஹ:– பௌர்ணமியன்று புஷ்ய நட்சத்திரம் வரும் மாதம்.

**4.2.4** லுப்[3]விஸே[1]ஷே

ஒரு குறிப்பிட்ட நேரத்தைச் சுட்டாமல் அமையும்போது, மேலே விதிக்கப்பட்ட ஒட்டு (அதாவது அண்) கெடும் (லுப்) அத்[3]ய புஷ்ய: ' இன்று புஷ்ய நட்சத்திரம்' இது, இரவு, பகல் என்று நேரத்தைக் கு றிப்பிட்டுக் கூறவில்லை, ஆகையால், இவ்வொட்டு இங்கு கெடுகிறது.

**4.2.5** ஸம்க்[3]ஞாயாம் ஸ்[1]ரவண அஸ்[1]வத்த[2]ாப்யாம்

ஸ்[1]ரவண, அஸ்[1]வத்த[2] ஆகிய சொற்களுக்குப்பின், மேலே விதிக்கப்பட்ட ஒட்டு, தருவிக்கப்பட்ட சொல் ஒரு பெயராகவும், குறிப்பிட்ட நேரத்தைச் சுட்டுவதாகவும் அமையும் போது கெடும் (லுப்)

ஸ்[1]ரவணா ராத்ரி: – 'ஸ்ரவண எனப்படும் இரவு'

அஸ்[1]வத்தே[2]ா முஹூர்த: 'அஸ்[1]வத்த[2] எனப்படும் முகூர்த்தம்' ஆனால், ஸ்ராவணீ அல்லது ஆஸ்[1]வத்தீ[2] ராத்ரி, (இது பெயரல்ல ஆகையால் ஒட்டு கெடவில்லை)

**4.2.6** த்[3]வந்த்வாச் ச[2]:

நட்சத்திரங்களின் பெயர்களைக் கொண்ட ஆக்கப்பட்ட துவந்துவத்தொகையோடு 'ச[2]' ஒட்டு, அந்நட்சத்திரத்தில் சந்திரன் இருக்கிறானென்பதைச் சுட்ட (குறிப்பிட்ட நேரத்தைக் குறிப்பிட்டாலும் இல்லாவிட்டாலும்) இணைக்கப்படும்.

ராத[4]ானுராதீயா ராத்ரி:

திஷ்ய புனர்வஸவியமஹ:

குறிப்பிட்ட நேரத்தைச் சுட்டாமல் நிற்கும்போது, அத்[3]ய ராத[4]ானுராதீ[4]யம், அத்[3]ய திஷ்யபுனர்வஸவீயம்.

**4.2.7** த்[3]ருஷ்டம் ஸாம:

'மறை வெளியிடுதல்' என்ற பொருளில் 'அறிந்து கொண்டவர்' என்பதைக் குறிக்குஞ் சொல் மூன்றாம் வேற்றுமையிலமைந்து அறிந்து கொண்டது

த்ருவபம்–ஒரளவு

**4.3.163** ப$^2$லே லுக்

அவயவ, விகாரம், ஒரு பழத்தைக் குறிக்குமானால் அவைகளைச் சுட்டும் ஒட்டு கெடும் (லுக்)

ஆமலகம்–நெல்லிக்காய் (ஆமலகீ மயட் லுக்)

**4.3.164** ப்லக்ஷாதி$^3$ப்$^4$ய: அண்

'ப்லக்ஷ' முதலியவைகளுக்குப்பின் 'அண்' ஒட்டு மேலே குறிப்பிட்ட பொருளில் வரும். ப்லாக்ஷம், நையக்$^3$ரோத$^4$ம்

**4.3.165** ஜம்ப்$^2$வா வா

'ஜம்பூ$^3$'வுக்குப்பின் 'அண்' மேலே கூறிய பொருளில் விருப்பாக வரும்.

ஜாம்ப$^3$வானி அல்லது ஜம்பூ$^3$னி; ப$^2$லானி 'நாவல் பழங்கள்'

**4.3.166** லுப் ச

'ஜம்பு'வுக்குப்பின் வரும். 'பழம்' என்பதைக் குறிக்கும் ஒட்டு விருப்பாகக் கெடும். (லுப்)

ஜம்பூ அஞ்லுப் ஜம்பூ:, ஜம்பூ ப$^2$லம்

லுப், லுக் ஆகியவைகளால் ஒட்டு மறையும் போது இரண்டுக்குமிடையே காணப்படும் வேறுபாடாவது, 'லுப்'பினால் மறைவு ஏற்படும்போது பால்–எண் ஒத்திசைவு சொற்களுக்கிடையே காணப்படும்.

ஜம்பூ பலம், ஜாம்ப$^2$வம்

வா: லுப்க்ரஹணே ப$^2$லபாகஸு'ஷாமுப ஸம்க்$^2$யானம்

குறிப்பிட்ட பருவத்தில் உதிரக்கூடிய செடிகளின் பெயருக்குப் பின்னால் வரும் பழத்தைக் குறிக்கும் ஒட்டு கெடும்.

வ்ரீஹய:, யவா:, மாஷா:, திலா:

வா: புஷ்பமூலேஷு ப$^2$ஹுலம்

பூக்கள், கிழங்குகள் ஆகியவைகளுக்குப்பின் வரும் அத்தகைய ஒட்டுக்கள் பல வகையில் கெடும்.

மல்லிகா:–மல்லிகைப்பூ

பி$^3$தாரீ–பிதாரியின் கிழங்கு

மாற்றுவடிவம் கதம்பம் புஷ்பம், கரவீரம்

**4.3.167** ஹரீதக்யாதி$^3$ப்$^4$யஸ்' ச

'ஹரீதகீ' முதலியவைகளுக்குப்பின்னும் பழத்தைக் குறிக்கும் ஒட்டு மறையும் (லுப்)

ஹரீதகீ ப$^2$லம், ஹரீதக்ய: ப$^2$லானி

**4.3.168** கம்ஸீய பரஸவ்யயோர் யஞளெலுக் ச

'அதனாலாக்கிய பொருள்' என்ற பொருளைச் சுட்டும் ஒட்டுக்களான 'யஞ்', 'அஞ்' முறையே கம்ஸீய, பரஸவ்ய என்ற சொற்களுக்குப்பின் வரும்போது அச்சொற்களையாக்கப்பட்ட ஒட்டுக்களான ச², யத் ஆகியவைகள் மறையும் (லுக்)

கம்ஸ + ச² = கம்ஸீய

கம்ஸீய + யஞ் + கம்ஸ + யஞ் = காம்ஸ்ய:

பரஸவ + யத் = பரஸவ்ய,

பரஸவ்ய + அஞ் + பரஸு + அஞ் =பாரஸவ:

**4.4.1** ப்ராக்³ வஹதேஷ் ட²க்

'தத்²வஹதி' என்ற சூத்திரத்துக்கு முன் (வரை) ட²க் ஒட்டு வரும்.
'ட²க்' ஒட்டு 4.4.78 வரையில் விளக்கப்பட்ட பொருட்களில் வரும். இது ஒரு அதிகார சூத்திரம்.

வா: டக் ப்ரகரணே தத³ாஹேதி மாஸ'ப்³த³ா தி³ப்⁴ய உபஹம்க்²யானம்

'மாஸ'ப்த³' ஆகியவைகளுக்குப்பின் 'ட²க்' ஒட்டு 'அவன் அதைச் சொன்னான்' என்ற பொருளில் வரும்.

மாஸப்தி³க:–மாஸ'ப்த³ இத்யாஹ.

'சத்தம் போடாதீர்கள்' என்று சொல்பவன்'. இது ஒரு தொடருக்குப்பின் ஒட்டு வருவதை எடுத்துக்காட்டுகிறது.

கார்ய ஸ'ப்³தி³க:

வா: ஆஹெள ப்ரபூ⁴தாதி³ப்⁴ய:

'ப்ரபூ⁴த' ஆகியவைகளுக்குப்பின்னும் இவ்வொட்டு 'அவன் அதைச் சொன்னான்' என்ற பொருளில் வரும்.

ப்ராபூ⁴திக: 'அதிகமாகப் பேசுபவன்'

பார்யாப்திக: (க்ரியாவிஸேஷணம்)

வா: ப்ருச்'ச²தெள ஸுஸ்நாதாதி³ப்⁴ய

'ஸுஸ்நாத' முதலியவைகளுக்குப்பின் இவ்வொட்டு 'அவன் கேட்டான்' என்ற பொருளில் வரும்.

ஸௌஸ்நாதிக: 'நன்றாகக் குளித்தாயா'வென்று கேட்பவன்'

ஸௌக²ராத்ரிக: (ஸுக²ராத்ர)

ஸௌக²ஸ'ாயனிக: (ஸுக²ஸயன)

வா: க³ச்'ச²தோ பரத³ாராதி³ப்⁴ய:

'பரத³ாரா' முதலியவைகளுக்குப்பின் இவ்வொட்டு 'அவன் போகிறான்' என்ற பொருளில் வரும்:

பாரத³ாரிக:–'மற்றவர்களின் மனைவியுடன் கள்ளத்தொடர்பு கொள்பவன்'

கெ3ளருதால்பிக:

**4.4.2** தேன தீ3வ்யதி க2னதி ஜயதிஜிதம்

3ஆம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'ட2க்' ஒட்டு, 'அவன் ஆடுகிறான், தோண்டுகிறான், வெல்கிறான், வெல்லப்படுகிறான்' என்ற பொருட்களில் வரும்.

ஆக்ஷிக: (அக்ஷ ட2க்) 'சூதாடுபவன்'

'அதாவது பகடையை வைத்து விளையாடுபவன்'

ஸா1லாகிக:

ஆப்4ரிக:–'மண்வெட்டியால் தோண்டுபவன்'

ஆக்ஷிக:–'பகடையால் வெல்பவன்'

ஆக்ஷிகம்–'சூதாட்டத்தில் வெல்லப்பட்டது'

**4.4.3** ஸம்ஸ்க்ருதம்

'ட2க்' ஒட்டு, மூன்றாம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'கலை நுட்பமூட்டு' என்ற பொருளில் வரும்.

ஸம்ஸ்க்ருதம் என்ற சொல் ஒரு பொருளின் குணத்தையதிகமாக்குதல் என்று பொருள்படும். உணவுப் பண்டங்களைச் சுட்டும்போது அதன் சுவையை அதிகமாக்குதல் என்று பொருட்படும்.

தா3தி4கம் (த3தி4 ட2க்) 'தயில் கலந்து சுவையூட்டியது'

ஸா1ரங்க3வேரிகம்–'இஞ்சியினால் சுவைகூட்டியது'

மாரிசிகம்–'மிளகினால் சுவைகூட்டியது'

இது யோகவிபாகமாகும்.

**4.4.4** குலத்1த2க உபத4ாதண்

குலத்1த2 என்ற சொல்லுக்குப்பின்னும், 'உ'வை யீற்றயலாகக் கொண்ட சொல்லுக்குப்பின் பின்னும் மேலே கூறிய பொருளில் 'அண்' ஒட்டு வரும்.

கௌலத்1த2ம்–குலத்த என்ற பருப்போடு கலந்தது.

தைத்திடீகம் (தித்திடீக அண்) புளியோடு சேர்த்து சுவையூட்டியது

தா3ர்த3ப4கம்

**4.4.5** தரதி

'அதைக் கொண்டு தண்ணீரைக் கடக்கிறான்' என்ற பொருளில் ட2க் ஒட்டு மூன்றாம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் வரும்.

காண்ட3ப்லவிக: (காண்டப்லவ ட2க்)

ஔடு3பிக: (உடு3ப ட2க) தோணியால் தண்ணீரைக் கடக்கிறவள்.

**4.4.6** கோ3ா புச்1ச2ாத்3ட2ஞ்

'அவன் அதைக் கொண்டு கடக்கிறான் என்ற பொருளில், கோ3ாபுச்1ச2 (3ஆம் வேற்றுமைச் சொல்) என்ற சொல்லுக்குப்பின் 'ட2ஞ்' ஒட்டு வரும்.

கே$^{3}$ாபுச்$^{1}$சி$^{2}$க:– 'மாட்டின் வாலைப்பிடித்துக்கொண்டு தண்ணீரைக் கடக்கிறான்'

ட$^{2}$க், ட$^{2}$ஞ் இவ்விரண்டுக்கும் சுரத்தில் வேறுபாடு காணப்படும்

**4.4.7** நௌ த்$^{2}$வ்யசஷ்ட$^{2}$ன்

நௌ என்ற சொல்லுக்குப்பின்னும், ஈரசைச் சொற்களுக்குப் பின்னும் 'ட$^{2}$ன்' ஒட்டு மேலே கூறிய பொருட்களில் வரும்.

நாவிக: 'கப்பலோட்டி'

ப்லவிக: 'தோணியோட்டி'

ப$^{3}$ாஹுக:'நீச்சல்காரன்'

ப$^{3}$ாஹுகா (பெண்பால்)

**4.4.8** சரதி ·

மூன்றாம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'ட$^{1}$க்' ஒட்டு, 'அதனால் செல்கிறான், உண்கிறான் அல்லது வாழ்கிறான்' என்ற பொருளில் வரும்.

த$^{3}$ாதி$^{4}$க: (த$^{3}$த்$^{4}$னா சரதி) 'தயிரினால் வாழ்பவன்'

அதாவது தயிரை உண்டு வாழ்பவன்'

ஹாஸ்திக: 'யானையின் மேல் சவாரி செய்து கொண்டு செல்பவன்'

ஸ$^{1}$ாகடி$^{1}$க: 'வண்டியில் செல்பவன்'

**4.4.9** ஆகர்ஷாத் ஷ்ட$^{2}$ல்

'ஆகர்ஷ' (உரைகல்) என்ற சொல்லுக்குப்பின், மேற்கூறிய பொருட்களில் 'ஷ்டல்' ஒட்டு வரும்.

'ஷ்டல்' ஒட்டின் ஈறான் 'ல்' சுரத்துக்காக. 'ஷ்' ஒரு 'இத்' ஒட்டைச் சேர்ந்தது. சூ. 7இல் காணப்படும் 'ஷ்' ஒட்டைச் சேர்ந்ததல்ல அது ஸந்தியால் வருகிறது. எங்கு 'ஷ்' ஒட்டைச் சேர்ந்தது, எங்கு அது ஒட்டைச் சேராதது என்ற ஐயம் வரும். அதைத் தவிர்ப்பதற்காக ஒரு சிறிய செய்யுள் காணப்படுகிறது. அது வருமாறு:

ஆகர்ஷாத் பர்பாதே$^{3}$ர் ப$^{4}$ஸ்த்ராதி$^{3}$ப்$^{4}$ய:

குஸீத ஸூத்ராச்ச/ஆவஸத$^{2}$ாத் கிஸாராதே$^{3}$: ஷித:

ஷடே$^{3}$தே ட$^{2}$க$^{3}$தி$^{4}$காரே.

சூ. 9, 10.16,31,74,53 ஆகிய ஆறு சூத்திரங்களிலும் 'ஷ்' ஒரு 'இத்'தாகும். ஆகையால், இதைக் கொண்டு தருவிக்கப்பட்ட சொற்களோடு ஙீஷ் (4.1.41) ஒட்டிணைத்து பெண்பாற்சொற்களாக்கப்படும். ஆகார்ஷக: ஆகார்ஷிகீ (பெண்பால்) 'உரை கல்லோடு செல்பவன்'

**4.4.10** பர்பாதி$^{3}$ப்$^{4}$ய: ஷ்டன்

'பர்ப' முதலியவைகளுக்குப்பின் மேலே கூறிய பொருட்களில் 'ஷ்டன்' ஒட்டு வரும். பர்பிக:, பர்பிகீ (பெண்பால்) 'சக்கர நாற்காலியில் செல்பவன்'

அஸ்விக: அஸ்விகீ (பெண்பால் 'குதிரையில் செல்பவன்'

**4.4.11** ஸ்வக3ணாத்3 ட2ஞ் ச

'ஸ்'வக3ண' என்ற சொல்லுக்குப்பின் 'ட2ஞ்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும். 'ஷ்டன்' ஒட்டும் வரும்.

ஸ்'வாக3ணிக:–'நாயால் பிழைக்கிறவன்'

ஸ்வாகணிகீ (பெண்பால்)

ஸ்வக3ணிக:, ஸ்வகணிகீ ('ட2ன்' உடன்)

**4.4.12** வேதனாதி3ப்4யோ ஜீவதி

'வேதன' (கூலி, சம்பளம்) முதலியவைகளுக்குப்பின் 'அதனால் வாழ்கிறான்' என்ற பொருளில் 'ட2க்' ஒட்டு வரும்.

வைதனிக: கூலி வேலைக்காரன்

த3னுர் தண்டிக:, த4னுஷ்க:, தண்டி3க:

**4.4.13** வஸ்னக்ரய விக்ரயாட்2ட3க:

வஸ்ன, க்ரய, விக்ரய ஆகியவைகளுக்குப்பின் 'டன்' ஒட்டு வரும் (மேலே கூறிய பொருளில்)

வஸ்னிக:–கூலி சம்பாதித்து வாழ்பவன்

க்ரய விக்ரயிக:, க்ரயிக:, விக்ரயிக:, வியாபாரி

**4.4.14** ஆயுத4ாச் ச2 ச

ச2, வுன் 'ட2ன்' உம் 'ஆயுத' என்ற சொல்லுக்குப்பின் 'அதைக் கொண்டு பிழைப்பவன்' என்ற பொருளில் வரும்.

ஆயுதீ4ய: (ச்2 'வுடன்)

ஆயுதி4க: ('டன்'னுடன்) ஆயுதங்கள் விற்றுச் சம்பாதிக்கும் வியாபாரி.

**4.4.15** ஹரதி உத்ஸங்க3ாதி3ப்4ய:

'உத்ஸங்க3' முதலிய சொற்களுக்குப்பின் 'ட2க்' ஒட்டு 'தூக்கிக் கொண்டு செல்தல்' என்ற பொருளில் வரும்.

ஔத்ஸங்கி3க:–'மடியில் கொண்டு போகிறவன்'

ஔடு3பிக:–'படகில் கொண்டு செல்பவன்'

**4.4.16** ப4ஸ்த்ராதி3ப்4ய: ஜ2ன்

ப4ஸ்த்ர (தோல்பை) முதலியவைகளுக்குப்பின் 'ஜ2ன்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

ப4ஸ்த்ரிக:'தோல்பையில் சாமான் தூக்கிப் பிழைப்பவன்'

ப4ஸ்த்ரிகீ (பெண்பால்)

ப4ரடிக:, ப4ரடிகீ

**4.4.17** விப⁴ாஷா விவத⁴ வீவத⁴ர்த்

விவத⁴, வீவத⁴, 'காவடி' ஆகியவைகளுக்குப்பின் 'ஜ2ன்' ஒட்டு மே லே கூறிய பொருளில் விருப்பாக வரும்.

விவதி⁴க:, விவதி⁴கீ

வீவதி⁴க:, வீவதி⁴கீ

வைவதி⁴க:, வைவதி⁴கீ (டன் உடன்)

காவடியில் தூக்கிக் கொண்டு செல்பவன்

**4.4.18** அண் குடிலிகாயா:

குடிலிகா 'வளைந்து செல்லும்' (3ஆம் வேற்றுமைச் சொல்லாக நிற் கும்போது) என்ற சொல்லுக்குப்பின் 'அண்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

கௌடி'லிகோ ம்ருக: 'திருட்டுத்தனமாக வந்து விலங்குகளைப் பிடிக்கும் வேட்டைக்காரன்' அல்லது 'வஞ்சமாக மனிதனை இழுத்துச் செல்லும் மான்' கெடிளலிக; கர்மார:

**4.4.19** நிர்வ்ருத்தே அக்ஷ த்³யதாதி³ப்ய:

அக்ஷத்³யத முதலிய சொற்களுக்குப்பின் 'டக்' ஒட்டு 'அதனால் முடிக்கப்பட்டது' என்ற பொருளில் வரும்.

ஆக்ஷத்³யதிகம் வைரம் (வளர்ந்து வரும்)

ஆனால் சூதாட்டத்தால் முடிவுற்ற பகை

ஜானுப்ரஹ்ருதிகம்.

**4.4.20** த்ரேர் மப் நித்யம்

'த்ரி' என்ற ஒட்டில் முடியுஞ் சொற்களுக்குப்பின் 'மப்' ஒட்டு மேலே கூறிய பொருளில் கட்டாயமாக இணைக்கப்படும். 'த்ரி', 'க்த் ரி' என்ற ஒட்டைச் சுட்டும் (3.3.88), பச் க்த்ரி மப் பக்த்ரிமம்–'சமைப்பதால் முடிவுபெற்றது' க்ருத்ரிமம்

வா: ப⁴ாவ ப்ரத்யயாந்தாதிமப்³ வக்தவ்ய:

ஒரு நிலையைக் குறிக்குமொட்டையீறாகக் கொண்ட சொல்லுக்குப் பின் 'இமப்' வரும்.

பாகிமம், த்யாகி³மம்

**4.4.21** அபமித்ய யாசிதாப்⁴யாம் கக்கனௌ

அபமித்ய, யாசித என்ற சொற்களுக்குப்பின் முறையே 'கக்', கன் ' ஒட்டுக்கள்' அதனால் முடிவுபெற்றது' என்ற பொருளில் வரும்.

ஆபமித்யகம்–'கடன்'

யாசிதகம்–'பிச்சையெடுத்துப் பெற்ற பொருள்'

**4.4.22** ஸம்ஸ்ருஷ் டே

'அதனால் கலக்கப்பட்டது' என்ற பொருளில் மூன்றாம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'ட$^{2}$க்' ஒட்டு வரும். த$^{3}$ாதி$^{4}$கம் (த$^{3}$தி$^{4}$ டக்) 'தயிரால் கலக்கப்பட்டது' 4.4.3 இல் கூறபட்ட ஸம்ஸ்க்ருதம் என்ற சொல், இரண்டு பொருட்களின் கலவையால் அதைவிடச் சிறந்த ஒன்று ஆக்கப்பட்டது என்ற பொருளில் வரும். அம்மாதிரியான எதுவும் 'ஸம்ஸ்ருஷ்ட' கூட்டாது.

**4.4.23** சூர்ணாதி$^{3}$னி:

'இனி' ஒட்டு 'சூர்ண' 'பொடி' என்ற சொல்லுடன் 'அதனால் கலக்கப்பட்டது' என்ற பொருளில் வரும்.

சூர்ணினோ அபூபா:– 'பொடி தூவப்பட்ட ஆப்பம்'

சூர்ணினீ த$^{4}$ானா:

**4.4.24** லவணால் லுக்

'லவண' (உப்பு) என்ற சொல்லுடன் வரும். மேலே கூறிய பொருளைக் குறிக்கும் ஒட்டு கெடும் (லுக்)

லவண:–'உப்புடன் சேர்க்கப்பட்டது'

லவண: ஸூப:–'உப்புச் சேர்க்கப்பட்ட சாறு'

**4.4.25** முத்$^{3}$க$^{3}$ாத்$^{3}$ அண்

'முத்$^{3}$க$^{3}$' 'பயறு'வுக்குப்பின் 'அண்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

மௌத்$^{3}$க$^{3}$: ஒத$^{3}$ன:– 'பயறுடன் கலந்த சோறு'

**4.4.26** வ்யஞ்ஜனை: உபஸிக்தே

வியஞ்சனத்தைக் குறிக்குஞ் சொல்லுடன் 'டக்' ஒட்டு, அதனால், தூவியது' என்ற பொருளில் வரும்.

த$^{3}$ாதிகம், 'தயிறுடன் கலந்தது'-பாயஸிகம் 'பால் அல்லது தண்ணீருடன் கலக்கப்பட்டது'

**4.4.27** ஓஜஸ் ஸஹோம்ப$^{4}$ஸா வர்த்தே

ஓஜஸ் ('பலம்'), ஸயஸ் 'வன்முறை', அம்ப$^{4}$ஸ் 'தண்ணீர்' ஆகியவற்றோடு 'உளதாகு, காணப்பெறு' என்ற பொருளில் 'டக்' ஒட்டு வரும்.

ஔஜஸிக:–பலமுடைய

ஸாஹஸிக – திருடன்

ஆம்ப$^{4}$ஸிக–நீர்வாழ் செடி அல்லது உயிரினம், பொதுவாக மீன் என்ற பொருட்படும்.

**4.4.28** தத் ப்ரதி அனுபூர்வம் ஈப லோம கூலம்

2ஆம் வேற்றுமைச் சொல்லாக நிற்கும் ப்ரதி, அனு ஆகியவைகள் முதலுறுப்பினராகக் கொண்ட ஈப 'தண்ணீர்' லோம 'ரோமம்', 'கூலம்' 'கரை'

ஆகியவைகளுக்குப் பின் 'டக்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
ப்ராதீபிக:– தண்ணீர் ஓட்டத்திற்கு மாறாக
ஆன்வீபிக:– தண்ணீர் ஓட்டத்திற்குச் சமமாக
ப்ராதிலோமிக:– ரோமத்துக்கு எதிராக
ஆனுலோமிக:– ரோமத்துடன்
ப்ராதிகூலிக;– கரைக்கு எதிராக
ஆனுகூலிக:– கரையுடன்

**4.4.29** பரிமுக$^{2}$ம் ச
2ஆம் வேற்றுமையிலமையும் பரிமுக$^{2}$ம் என்ற சொல்லுக்குப்பின்னும் ' டக்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
பாரிமுகி$^{2}$க:– வேலைக்காரன்

**4.4.30** ப்ரயச்ச$^{2}$தி க$^{3}$ர்ஹ்யம்
'அவன் கொடுக்கிறான்' என்ற பொருளில் 2ஆம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'டக்' ஒட்டு கொடுக்கும் நோக்கம். கீழ்த்தரமானதாக இருக்குமானால் வரும்.
த்$^{3}$விகு$^{3}$ணிக:– பணத்தை இரண்டு மடங்காக்கும் நோக்கத்துடன் கடன் கொடுப்பவன்
த்ரைகுணிக:

வா: வ்ருத்$^{3}$தே$^{4}$ர் வ்ருது$^{4}$ஷிப$^{4}$ாவோ வக்தவ்ய:
வ்ருத்$^{3}$தி 'வட்டி' இவ்வொட்டிணைக்கும்போது வ்ருது$^{4}$ஷி ஆகும். வார்து$^{4}$ஷிக:– பணத்தை அதிகரிப்பதற்காக கடன் கொடுப்பவன்

**4.4.31** குஸீத த$^{3}$ஸைகத$^{3}$ஸாத் ஷ்டன்ஷ்டசௌ
குஸீத 'வட்டிக்குக் கடன் கொடுத்தல்' த$^{3}$ஸைகத$^{3}$ஸ '10 விழுக்காடு வட்டிக்குப் பணம் கடன் கொடுத்தல்' என்ற சொற்களுக்குப்பின் முறையே 'ஷ்டன்', 'ஷ்டச்' ஒட்டுக்கள் மேலே கூறிய பொருளில் வரும்.
குஸீதக:–'சுடுவட்டி வாங்குபவன்'
த$^{3}$ஸைகாத$^{3}$ஸிக: '10 விழுக்காடு வட்டி வாங்குபவன்'

**4.4.32** உஞ்ச$^{2}$தி
2ஆம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'டக்' ஒட்டு 'பொறுக்குகிறான்' என்ற பொருளில் வரும்
ப$^{3}$ாத$^{3}$ரிக:–'இலந்தைப் பழத்தைப் பொறுக்குபவன்'

**4.4.33** ரக்ஷதி
'அவன் காப்பாற்றுகிறான்' என்ற பொருளில் 2ஆம் வேற்றுமைச் சொல்லுக்குப்

பின் 'டக்' ஒட்டு இணைக்கப்படும்.

ஸாமாஜிக:–பார்வையாளர். தான் வருகை தந்து அவைக்கு உதவுகிறவன்.

**4.4.34** ஸப்³த³ த³ர்து³ரம் கரோதி

ஸப்த³, த³ர்து³ர 'ஒருவகைப் பானை' ஆகியவைகளோடு 'அவன் அதைச் செய்கிறான்' என்ற பொருளில் 'டக்' ஒட்டு வரும்.

ஸாப்³தி³க:–'இலக்கண ஆசிரியர்'

தா³ர்து³ரிக: குயவன்

**4.4.35** பக்ஷி மத்ஸ்ய ம்ருகான் ஹந்தி

பறவை, மீன், விலங்குகள், ஆகியவைகளைக் குறிக்குஞ் சொற்களுடன் 'டக்' ஒட்டு ' அவன் அதைக் கொல்கிறானென்ற பொருளில் வரும்.

பாக்ஷிக:– பறவையைக் கொல்பவன்

ஸாகுனிக:– மாயூரிக:, தைத்திரிக:

மாத்ஸிக:–செம்படவன், மைனிக:

மார்கி³க:–விலங்குகளை வேட்டையாடுபவன்

ஸெளகரிக:– பன்றி வேட்டையாடுபவன்

**4.4.36** பரி பந்த²ம் ச திஷ்ட²தி

2ஆம் வேற்றுமையிலமையும் பரிபந்த²ம் 'வழியில்' என்ற சொல்லுக்குப்பின் 'டக்' ஒட்டு 'அவன் நிற்கிறான் (அ) இருக்கிறான்' என்ற பொருளில் வரும்.

பாரி பந்தி²க:–வழிப்பறி கொள்ளைக்காரன் அல்லது நெடுஞ் சாலையில் கொலை செய்பவன்

**4.4.47** மாதே²ாத்தர பத³ பதவ்யனுபத³ம் த⁴ாவதி

மாத², 'வழி, சாலை' என்ற சொல் இரண்டாவது உறுப்பினராக நிற்கும் சொல்லுக்குப்பின்னும், பதவீ 'நடைபாதை' அனுபத 'நெருக்கமாகத் தொடர்தல்' ஆகியவைகளுக்குப் பின்னும், 'ஓடுகிறான்' என்ற பொருளில் 'டக்' ஒட்டு வரும்.

தாண்டமாதி²க:–'நெடுஞ்சாலையில் ஓடுபவன்'

பாத³விவக:–'நடைபாதையில் ஓடுபவன்'

அனுபதிக:–'பின் நடப்பவர், இணங்கி நடப்பவர்'

**4.4.38** ஆக்ரந்தார் ட¹ஞ் ச

ஆக்ரந்த³ 'யுத்த பூமி' அல்லது அழுமிடம்' என்ற சொல்லுக்குப் பின் 'டஞ்' ஒட்டும் மேலே கூறிய பொருளில் வரும் 'டக்' உம் வரும் (ச)

ஆக்ரந்தி³க:– 'ரணகளத்தில் ஓடுபவன் அல்லது அழுகிற இடத்துக்கு ஓடுபவன்'

ஆக்ரந்திகீ–'பெண்பால்'

'டக், டஞ்' இரண்டும் சுரத்தால் வேறுபடும்.

**4.4.39** பதே³த்தரபத³ம் க்ருஹ்ணாதி

'பத' (சொல்) இரண்டாவது உறுப்பினராக நிற்கும் சொல்லுக்குப்பின் 'எடுக்கிறான், பிடித்துக் கொள்கிறான்' என்ற பொருளில் 'டக்' ஒட்டு வரும்.

பௌர் வபதிக: 'முதலுறுப்பினரை பற்றிக் கொள்வது'

**4.4.40** ப்ரதி கண்ட³ார்த²லலாமம் ச

ப்ரதிகண்ட 'ஒவ்வொரு தொண்டையும்; அர்த² 'பொருள்'. லலாம 'நகை' (2ஆம் வேற்றுமையிலமையும்) ஆகிய சொற்களுக்குப்பின் 'டக்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

ப்ராதிகண்டி¹க: 'ஒவ்வொரு தொண்டையையும் பிடிப்பவன்'

ஆர்தி²க: 'பொருளைப்புரிந்து கொள்பவன்'

லாலாமிக: 'நகையைப் பிடிப்பவன்'

**4.4.41** த⁴ர்மம் சரதி

2ஆம் வேற்றுமையிலமையும் 'த⁴ர்ம' என்ற சொல்லுக்குப்பின் 'டக்' ஒட்டு 'அவன் நடந்து கொள்கிறான்' என்ற பொருளில் வரும்.

த⁴ார்மிக:--தர்மத்தின் படி நடந்து கொள்கிறவன்,

தர்மத்தைக் கடைபிடிப்பவன்

**4.4.42** ப்ரதிபத²மேதி டன்ஸ் ச

2ஆம் வேற்றுமைச் சொல்லாக அமையும் ப்ரதிபத²ம் 'ஒவ்வொரு வழியும்' என்ற சொல்லுக்குப்பின் டன், டக் என்ற இரண்டு ஒட்டுக்களும் வரும்.

ப்ரதிபதி²க: அல்லது ப்ராதிபதி²க: 'சாலை வழியாகப் போகிறவன்.

**4.4.43** ஸம வாயான் ஸமவேதி

'ஒன்று சேர்த்தல்' என்ற பொருளைச் சுட்டும் சொற்களுக்குப்பின் 'டக்' ஒட்டு 'சேர்க்கிறான்' என்ற பொருளில் வரும்.

ஸாமவாயிக: 'அடிக்கடி கூட்டத்துக்குச் செல்பவன்'

ஸாமாஜிக:, ஸாமூஹிக:

**4.4.44** பரிஷதோ ண்ய:

'ண்ய' ஒட்டு மேலே கூறிய பொருளில் 'பரிஷத்' 'அவை' என்ற சொல்லுக்குப்பின் வரும்.

பாரிஷத்³ய:--அவையின் உறுப்பினர்'

**4.4.45** ஸேனாயா வா
ஸேனா 'படை' என்ற சொல்லுக்குப்பின் விருப்பாக 'ண்ய' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
ஸைன்ய:, ஸைனிக:–படைவீரன்

**4.4.46** ஸம்க்[3]ஞாயாம் லலாட குக்குட்'யௌ பஸ்'யதி
லலாட 'நெற்றி', குக்குட 'கோழி' என்ற சொற்களுக்குப்பின் 'பார்க்கிறான்' என்ற பொருளில் 'டக்' ஒட்டு வரும். தருவிக்கப்பட்ட சொல் ஒரு பெயரைக் குறிக்கும்.
லாலாடிக: 'எஜமானரின் நெற்றியைப் பார்ப்பவன் அதாவது சரிவர வேலை செய்யாத வேலைக்காரன்'
கௌக்குடிக: 'சுற்றும் துறவி' அதாவது தரையைப் பார்த்துக் கொண்டு நடப்பவன்'

**4.4.47** தஸ்ய த[4]ர்ம்யம்
ஆறாம் வேற்றுமைச் சொல்லுக்குப் பின் 'டக்' ஒட்டு 'அதன் வழக்கம்' என்ற பொருளில் வரும்.
ஸௌல்க ஸாலிக:–சுங்கச் சாவடி அதிகாரி
ஆகரிக:–'சுரங்க அதிகாரி'

**4.4.48** அண் மஹிஷ்யாதி[3]ப்[4]ய:
மஹிஷு 'பட்டமகிஷி' முதலியவைகளுக்குப்பின் 'அண்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
மாஹிஷம்–'பட்டமகிஷியின் கடமை'
ப்ராஜாபதம்

**4.4.49** ருதோ அஞ்
'ரு' ஈற்றுச் சொற்களுக்குப்பின் 'அஞ்' ஒட்டு அவன்/அதன் கடமை என்ற பொருளில் வரும்.
பௌத்ரம்–'போத்ரு'வின் கடமை
உத்[3]க[3]ாத்ரம்–உத்[3]க[3]ாத்ருவின் கடமை

வா: நராச்ச இதி வக்தவ்யம்
'நர' வுக்குப்பின்னும் இவ்வொட்டு வரும்.
நாரீ (நரஸ்ய த[4]ர்ம்யா)

வா: வி'ஸஸிதுரிட்[3]லோபஸ' ச
'விஸஸித்ரு' வுக்குப் பின்னும் இவ்வொட்டு வரும். அதன் 'இட்' கெடும்.
வைஸஸ்ரம்.

வா: விப4ாஜயிதுர் ணிலோபஸ்ச

'லிப4ாஜயித்ரு'வுக்குப்பின்னும் இவ்வொட்டு வரும். அதன் 'ணி' ஒட்டு கெடும். வைப4ாஜித்ரம்

**4.4.50** அவக்ரய:

'அதன் வரி' என்ற பொருளில் 'டக்' ஒட்டு ஆறாம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் வரும்.

ஸௌல்கஸாலிக: 'சுங்க்கச் சாவடி வரி'

**4.4.51** தத3ஸ்ய பண்யம்

விற்பனைக்குரிய பொருளைச் சுட்டும் சொல். முதல் வேற்றுமைச் சொல்லாக அமைந்து நிற்கும்போது 'டக்' ஒட்டு அச்சொல்லுக்குப்பின் 'இது அவன் விற்கும் பண்டம்' என்ற பொருளில் வரும்.

ஆபூபிக:–ஆப்பம் விற்கிறவன். அதாவது ஆப்பங்கள் அவனுடைய விற்கும் பொருள்.

**4.4.52** லவணாத் டஞ்

லவண 'உப்பு' என்ற சொல்லுக்குப்பின் மேலே கூறிய பொருளில் 'டஞ்' வரும்.

லாவணிக:–உப்பு வியாபாரி

டக், டஞ் இரண்டுக்கும் சுரத்தில் வேறுபாடு காணப்படும்.

**4.4.53** கிஸ'ராதி3ப்4யஷ்டன்

கிஸ'ர 'வாசனைத்திரவியம்' முதலிய சொற்களுக்குப்பின் 'ஷ்டன்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

கிஸ'ரிக:– 'வாசனைத் திரவிய வியாபாரி' கிஸரிகீ (பெண்பால்)

நரதி3க (நரத3)

**4.4.54** ஸ'லாலுனோ அன்யதரஸ்யாம்

ஸ'லாலுன் (ஒரு வாசனைத்திரவியத்தின் பெயர்) உக்குப்பின் விருப்பாக 'ஷ்டன்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும். ஶலாலுக:, ஸலாலுகீ (பெண்பால்) அல்லது ஸலாலுக:, ஸலாலுகீ (டக்)

**4.4.55** ஸி'ல்பம்

'இது அவன் கலை' என்ற பொருளில் கலையைச் சுட்டுஞ் சொல்லுக்குப்பின் 'டக்' ஒட்டு வரும்.

மார்தங்கிக: 'மிருதங்க வாசிப்பதில் திறமை வாய்ந்தவன்'

வைணிக:– வீணை வித்வான்

**4.4.56** மட்3டு3க ஜ2ர்ஜ2ராத3ண் அன்யதரஸ்யாம்

மட்3டு3க, ஜ2ர்ஜ2ர 'ஒருவகை முரசு' ஆகியவைகளுக்குப்பின் 'அண்' ஒட்டு

மேலே கூறிய பொருளில் விருப்பாக வரும்.
மாட்டுக:, மாட்டுகிக:, முரசறைபவன்
(அண்) (டக்)
ஜ$^{2}$ார்ஜ$^{2}$ர:, ஜ$^{2}$ார்ஜ$^{2}$ரிக:

**4.4.57** ப்ரஹரணம்
'இது அவன் ஆயுதம்' என்ற பொருளில், ஆயுதத்தைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின் (அச்சொல் முதல் வேற்றுமையிலமையும்) 'டக்' ஒட்டு வரும்.
ஆணிக: 'வாள் வீரர்'
ப்ராஸிக:, சாக்ரிக:, த$^{4}$ானுஷ்க:

**4.4.58** பரஸ்'வத$^{4}$ாத் டஞ் ச
மேலே கூறிய பொருளில், டஞ், டக் என்ற இரண்டு ஒட்டுக்களும் பரஸ்வத$^{4}$ 'கைக்கோடரி' என்ற சொல்லுக்குப் பின் வரும்.
பாரஸ்வதி$^{4}$க:(அல்லது) பாரஸ்வதி$^{4}$க:

**4.4.59** ஸ'க்த்யஷ்ட்யோரீகக்
'ஈகக்' என்ற ஒட்டு, மேலே கூறிய பொருளில், ஸக்தி 'கணை', யஷ் டி 'கம்பு'

என்ற சொற்களுக்குப்பின் வரும். ஸாக்தீக: 'ஈட்டி வீரன்', யாஷ்டீக:

**4.4.60** அஸ்தி நாஸ்தி தி$^{3}$ஷ்டம் மதி:
'இது அவன் நம்பிக்கை' என்ற பொருளில் 'டக்' ஒட்டு, அஸ்தி 'இருக்கிறது', நாஸ்தி 'இல்லை' தி$^{3}$ஷ்ட 'விதி' என்ற சொற்களுக்குப்பின் 'டக்' ஒட்டு வரும்.
ஆஸ்திக:–கடவுளிருக்கிறார் என்று நம்புபவன்
நாஸ்திக:–'கடவுளை நம்பாதவன்'
தை$^{3}$ஷ்டிக:– 'விதியை நம்புபவன்', 'நேர்க்காட்சி வாதி'

**4.4.61** ஸீலம்
'இது அவன் பழக்கம்' என்ற பொருளில் முதல் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'டக்' ஒட்டு வரும்.
ஆபூபிக:–ஆப்பம் சாப்பிடுகிறது அவன் பழக்கம்
ஔத$^{3}$னிக:–சோறு சாப்பிடுவது அவன் பழக்கம்

**4.4.62** ச$^{2}$ாத்ராதி$^{3}$ப்$^{4}$யோ ண:
'சத்ர' 'மூடுதல்' முதலியவைகளுக்குப்பின் 'ண' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
ச$^{2}$ாத்ர:–'மாணவன் அதாவது ஆசிரியரிடம் புகலடைபவன்'

**4.4.63** கர்மாத்⁴யயனே வ்ருத்தம்

'படிக்கும்போது நிகழும் செயல்' என்ற பொருளில் 'டக்' ஒட்டு, செயலைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின் வரும்.

ஐகன்யிக: (ஒரு (ஏக) தவறு (அன்யத்) )

'படிக்கும்போது ஒரு தவறிழைத்தவன்'

**4.4.64** ப³ஹ்வச் பூர்வ பத³ாத் டச்

பல அசை கொண்ட சொல் முதலுறுப்பினராக நிற்குஞ் சொல்லு க்குப்பின் 'டச்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

த்³வாதஸான்யிக:–'படிக்கும்போது பன்னிரண்டு தவறுகளைச் செய்தவன்'

**4.4.65** ஹதிம் ப⁴க்ஷா:

இது, அவனுக்கு நலந்தருகிற ஆரோக்கியமான உணவு என்ற பொருளில், முதல் வேற்றுமையிலமையும் உணவைக்குறிக்கிற சொல்லுக்கு ப்பின் 'டக்' ஒட்டு வரும்.

ஆபூபிக:–'ஆப்பம் உண்பதினால் ஆரோக்கியம் பெறுகிறவன்

அல்லது ஆப்பத்தை விரும்பி உண்பவன்'

ஔதனிக:–சோறு உண்பதில் விருப்பமுள்ளவன்

**4.4.66** தத³ஸ்மை தீ³யதே

'அவனுக்கு நியாயமாகக் கொடுக்கப்பட வேண்டியது' என்ற பொருளில் (முதல் வேற்றுமைச் சொல்)லான கொடுக்கப்பட வேண்டிய பொருளைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின், 'டக்' ஒட்டு வரும்.

ஆக்³ர பே⁴ாஜனிக: உணவளிக்கும்போது முதலிடத்தைக் கொடுக்கப்பட வேண்டியவன், பிராம்மணன்.

**4.4.67** ஸ்ராணா மாம்ஸோத³னாட் டிட²ன்

ஸ்ராணா 'அரிசிக் கஞ்சி', மாம்ஸோத³ன 'மாமிசங்கலந்த அரிசிச் சோறு' ஆகிய சொற்களுக்குப்பின் 'டிட²ன்' ஒட்டு. 'அவனுக்கு இது நியாயப்படி கொடுக்கப்பட வேண்டியது' என்ற பொருளில் வரும்.

ஸ்ராணிக:, ஸ்ராணிகீ (பெண்பால்)

'அரிசிக் கஞ்சி பெறத்தகுதியுள்ளவன்'

மாம்ஸௌத³னிக:, மாம்ஸௌதனிகீ

டக், டிடன் என்ற இரண்டு ஒட்டுக்களும் சுரத்தால் வேறுபடும். இறுதியில் உதாத்த சுரம் பெறும். 'டக்' (6.1.165), முதலில் உதாத்தம் பெறும் 'டிடன்' (6.1.197), இவ்வொட்டுக்களிணைத்துத் தருவிக்கப்பட்ட சொற்களின் பெண்பால் சொற்கள் 'ஙீஷ்' இணைத்துப் பெறப்படும் (4.1.15) 'டஞ்', 'டிடன்' இரண்டுமே சுரத்திலும் பெண்பாலாக்கத்திலும் ஒத்தவையாகும். ஆகவே, 'டிடன்' இணைக்காமல், 'டஞ்' ஒட்டிணைத்தே விரும்பப்பட்ட சொல்லைத் தருவிக்க இயலும்போது, 'டிடன்'ஐ ஏன் இணைக்க வேணடும்? ஸ்ராணா,

மாம்ஸோதன என்ற இரண்டு சொற்களுக்குப் பின்னும், 'டிடன்' இணைக்காமல் 'டஞ்' ஐயே இணைத்து இச்சொற்களைப் பெறலாம். ஆயினும், சிலரின் கருத்துப்படி 'டிடன்' ஒட்டு மாம்ஸ, ஒதன ஆகியவைகளுடன் தனித்தனியாகவும் வரமுடியும். ஆனால் 'டஞ்'ஐ'ஓதன'த்துடன் அவ்வாறு இணைக்க முடியாது. ஏனெனில், 'டஞ்' இணைக்கும்போது முதலசை விருத்தியாகும் (7.2.117) 'டிடன்' உடன் வரும்போது அவ்வாறாகாது.
ஒதன டிடன் ஒத[3]னிக:, ஒதனிகீ,
ஓதன டஞ் ஔத[3]னிக: இச்சொல் இங்கு விரும்பப்படாதது.

**4.4.68** ப[4]க்தாதணன்யதரஸ்யாம்
ப[4]க்த 'உணவு' என்ற சொல்லுக்குப்பின் 'அண்' ஒட்டு விருப்பாக வரும் (மேலே கூறிய பொருளில்) ப[4]ாக்த:, ப[4]ாக்திக: உணவளிக்கத்தகுதியானவர்

**4.4.69** தத்ர நியுக்த:
'அதில் அமர்த்தப்பட்டவன்' என்ற பொருளில் 7ஆம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'டக்' ஒட்டு வரும்.
ஸெ'ளல்கஸ'ாலிக: 'சுங்கச்ச ாவடி
அதிகாரி ஆகரிக: – சுரங்க அதிகாரி

**4.4.70** அகாராந்தாத் ட[2]ன்
'அக[3]ார'வை இறுதியில் கொண்ட சொல்லுக்குப்பின் 'அதில் அமர்த் தப்பட்டவன்' என்று பொருளில் 'டன்' ஒட்டு வரும்.
தே[3]வாக[3]ாரிக:–'கோவிலில் பணி செய்ய அமர்த்தப்பட்டவன்' கோஷ்ட[2]ாக[3]ாரிக:, ப[4]ாண்டாக[3]ாரிக:

**4.4.71** அத்[4]யாயினி அதே[3]ஸகாலாத்
7ஆம் வேற்றுமையிலமையும் படிக்கத் தகுதியற்ற காலம் அல்லது இடத்தைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின், 'டக்' ஒட்டு 'அவன் அங்கு படிக்கிறான்' என்ற பொருளில் வரும்.
ஸ்'மாஸ'ானிக: 'இடுகாட்டில் படிப்பவன்'
சதுஷ்பதி[2]க: 'நாற்சந்தியில் படிப்பவன்'
சாதுர்தஸிக: 'சதுர்த்தசியன்று படிப்பவன்'

**4.4.72** கடினாந்த ப்ரஸ்தார ஸம்ஸ்த[2]ானேஷு வ்யவஹரதி
'கடின' (புதர்க்காடு, காடு) என்ற சொல்லிறுதியில் நிற்கும் சொல்லுக்குப்பின்னும், ப்ரஸ்தார 'காடு' ஸம்ஸ்த[2]ான'
'பொதுவிடம்' என்ற சொற்களுக்குப்பின்னும் (இவைகள் 7ஆம் வேற்றுமையிலமையும்) 'டக்' ஒட்டு, 'அவன் அதில் தொழில் நடத்துகிறான்' என்ற பொருளில் வரும். வாம்ஸகடினிக: (வம்ஸ1கடின) 'மூங்கில் புதரில் தொழில் நடவடிக்கை செய்பவன்'

ப்ராஸ்தாரிக: 'காட்டில் புதரில் தொழில் நடவடிக்கை செய்பவன்'
ஸாம்ஸ்த[2]ானிக: 'பொதுவிடத்தில் தொழில் நடவடிக்கை செய்பவன்'

**4.4.73** நிகடே வஸதி

7ஆம் வேற்றுமையிலமையும் நிகட 'அருகு' என்ற சொல்லுக்குப் பின் 'டக்' 'அவன் அங்கு வசிக்கிறான்' என்ற பொருளில் வரும்.

ஆரண்யகா: காட்டில் வசிக்கும் துறவி

நைகடிகா: கிராமத்துக்கு அருகில் வசிக்கும் துறவி

இந்த விதி, சில மனிதர்களைக் குறிப்பிட்ட, உண்டாக்கும் அடை மொழியைப் பற்றியது. பலவகைப்பட்ட துறவிகள், எங்கெங்கு வசிக்க வேண்டுமென்று சாத்திரங்கள் விதிக்கிறது. காட்டாக 'ஆரண்யக' எனப்படும் துறவிகள் மனிதர்கள் தங்குமிடத்துக்கு குறைந்தது இரண்டு மைல்களுக்குப்பாலுள்ள காட்டில் வசிக்க வேண்டுமென்று சாத்திரங் கூறுகிறது. அவ்வாறே நைகடிக எனப்படும் துறவிகள் மனிதர்கள் வசிக்குமிடத்துக்கு வெகு அருகில் வசிக்க வேண்டும்.

**4.4.74** ஆவஸத[2]ாத் ஷ்டல்

ஆவஸத[2] 'வீடு' என்ற சொல்லுக்குப்பின் மேலே குறிப்பிட்ட பொருளில் 'ஷ்டல்' ஒட்டு வரும்.

ஆவஸதி[2]க: 'வீட்டில் வசிப்பவன்'

துறவிக்கு மாறானவனைக் குறிக்கும்ஆவஸதி[2]கீ (பெண்பால்) 4.4.1இலிருந்து இதுவரை 'டக்' ஒட்டு விளக்கப்பட்டது. மற்ற வொட்டுக்கள் தொடர்ந்து வரும் சூத்திரங்களில் விளக்கப்படும்.

**4.4.75** ப்ராக்[3]கி[4]தாத் யத்

இதிலிருந்து, தஸ்மை ஹிதம் (5.1.5) வரையில் 'யத்'ஒட்டைப்பற்றிய விதிகள். இது ஒரு அதிகார சூத்திரம். ப்ராக் ஹித–'ஹித'வுக்குமுன்

**4.4.76** தத்[3] வஹதி ரத[2] யுக[3]ப்ராஸங்க[3]ம்

ரத, யுக 'நுகத்தடி' ப்ராஸங்க 'நுகத்தடி' ஆகியவைகள் 2ஆம் வே ற்றுமைச் சொல்லாக நிற்கும்போது, 'அதை இழுக்கிறது' என்ற பொருளில் 'யத்' வரும்.

ரத்[2]ய: 'தேரில் பூட்டப்படும் குதிரை'

யுக[3]ய: 'நுகத்தடியில் பூட்டப்பட்ட காளை'

ப்ராஸங்க்[3]ய: 'கூண்டற்ற கட்டைவண்டியில் பழக்கப்பட்ட குதிரைக்குட்டி'

**4.4.77** து[4]ரோ யட்ட[3]கௌ

து[4]ர (ஏர்க்கால்) வுக்குப்பின் (2ஆம் வேற்றுமைச் சொல்) 'யத்', 'ட[3]க்' ஒட்டுக்கள் மேலே கூறிய பொருளில் வரும்.

து[4]ர்ய: அல்லது தெ[4]ளரேய: 'பாரஞ் சுமக்கும் மிருகம்'

**4.4.78** க$^{2}$: ஸர்வது$^{4}$ராத்

2ஆம் வேற்றுமையில் நிற்கும் ஸர்வது$^{4}$ர என்ற சொல்லுக்குப்பின் மேலே கூறிய பொருளில் 'க' ஒட்டு வரும்.

ஸர்வது$^{4}$ரீண: 'எல்லாப் பளுவையும் சுமக்கிற'

**4.4.79** ஏக து$^{4}$ரால் லுக் ச

மேலே கூறிய பொருளில் 'க$^{2}$' ஒட்டு ஏகது$^{4}$ர 'ஒரு தண்டு'வுக்குப்பின் வரும். அவ்வொட்டு விருப்பாகக் கெடும். ஏகது$^{4}$ரீண:, ஏகது$^{4}$ர: 'ஒரு தண்டைச் சுமப்பவன்'

**4.4.80** ஸகடாத$^{3}$ண்

(இரண்டாம் வேற்றுமைச் சொல்) ஸகட 'வண்டி' வுக்குப்பின் 'அண்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

ஸாகட: 'வண்டி மாடு'

**4.4.81** ஹல ஸீராத் ட$^{2}$க்

ஹல, ஸீர 'ஏர்' (இரண்டாம் வேற்றுமை) என்ற சொற்களுக்குப்பின் மேலே கூறிய பொருளில் 'டக்' வரும்.

ஹாலிக: ஏர்க்கொழுவைத் தாங்குபவன்

ஸைரிக: ஏர்க்கொழுவைத் தாங்குபவன்

**4.4.82** ஸம்க்$^{3}$ஞாயாம் ஜன்யா:

(இரண்டாம் வேற்றுமைச் சொல்) ஜனீ 'மணப்பெண்' என்ற சொல்லுக்குப்பின், மேலே கூறிய பொருளில் 'யத்' ஒட்டு வரும். தருவிக்கப்பட்ட சொல் ஒரு பெயராகும்.

ஜன்ய: 'மாப்பிள்ளைத் தோழன்'

ஜன்யா–'மணப்பெண்ணின் தோழி'

**4.4.83** வித்$^{4}$யதி அத$^{4}$னுஷா

'அதைத் துளைக்கிறது' என்ற பொருளில் 'யத்' ஒட்டு இரண்டாம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் வரும். துளைக்கும் பொருள் வில்லைக் குறிக்காது.

பத்$^{3}$யா: கூழாங்கல் (எது பாதத்தைக் குத்துகிறதோ)

ஊரவ்யா: கண்டகா: 'தொடையைக் குத்தும் முட்கள்'

**4.4.84** த$^{4}$னக$^{3}$ணம் லப்$^{3}$த$^{4}$ா

'அவன் அடைகிறான்' என்ற பொருளில் த$^{4}$ன 'செல்வம்' க$^{3}$ண 'கூட்டம்' (2ஆம் வேற்றுமை ஆகியவைகளுக்குப்பின் 'யத்' ஒட்டு வரும்.

தன்ய: 'செல்வந்தன்'

க$^{3}$ண்ய: 'அதிகம் பெறுபவன்'

**4.4.85** அன்னாத் ண:
2ஆம் வேற்றுமையிலமையும் அன்ன 'உணவு' என்ற சொல்லுக்குப்பின் 'ண' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
ஆன்ன: 'உணவையடைந்தவன்'

**4.4.86** வஸம் க³த:
(2ஆம் வேற்றுமைச் சொல்லான) 'வஸ' என்ற சொல்லுக்குப் பின் 'யத்' ஒட்டு 'சென்றது' என்ற பொருளில் வரும். வஸ்ய: 'வேலைக்காரன் அதாவது ஒருவனுக்குக் கீழ்ப்படிபவன்'

**4.4.87** பத³மஸ்மின் த்³ருஸ்யம்
'அதில் காணப்படுகிறது' என்ற பொருளில் முதல் வேற்றுமையிலமையும் 'பதம்' 'பாதச் சுவடு' என்ற சொல்லுக்குப்பின் 'யத்' ஒட்டு வரும்.
பத்³ய: கர்த³ம: 'அதில் பாதச் சுவடுகள் காணப்படும்.
அதாவது சேறு.
பத்யா: பாம்ஸவ:–புழுதி

**4.4.88** மூலம் அஸ்யாப³ர்ஹி
மூல (முதல் வேற்றுமைச் சொல்) 'வேர்' என்ற சொல்லுக்குப் பின் 'யத்' ஒட்டு 'அதன் வேரறுத்தல்' என்ற பொருளில் வரும்.
மூல்யா: ஒரு பருப்பு வகை, அதாவது வேரோடு பிடுங்க வேண்டிய செடி வகை. காட்டாக உளுந்து.

**4.4.89** ஸம்க்³ஞாயாம் தேனுஷ்யா
தேனுஷ்யா, 'வாங்கிய கடனை அடைப்பதற்காகக் கொடுத்த பசு' என்ற சொல் விதிக்குப் புறம்பாக ஆக்கப்பட்ட சொல்.
தே⁴னு + யத் – தே⁴னு + ஷுக் + யத் + டாப் – தே⁴னுஷ்யா

**4.4.90** க்ருஹபதினா ஸம்யுக்தே ஞ்ய:
க்ருஹபதி (3ஆம் வேற்றுமை) 'வீட்டுத்தலைவர்' என்ற சொல்லுக்குப்பின் 'ஞ்ய' ஒட்டு, 'அவனுடன் சேர்ந்த' என்ற பொருளில் வரும். ஆக்கப்பட்ட சொல் ஒரு பெயராகும்.
க³ார்ஹபத்யம்–ஒரு வேள்வித் தீயின் பெயர். வீட்டு எசமானரால் உண்டாக்கப்பட்ட தீ.

**4.4.91** நௌ வயோ த⁴ர்ம விஷமூலமூல ஸீதா துலாப்⁴யஸ்
தார்ய துல்ய ப்ராப்ய வத்⁴ய ஆநாம்ய ஸம ஸமித ஸம்மிதேஷு
'யத்' ஒட்டு, நௌ 'படகு', வயஸ் 'வயது', த4ர்ம, 'குணம்', விஷ 'விடம்', மூல 'வேர்', மூல 'முதல்', ஸீதா 'ஏரால் உழுத இடம்', துலா 'தராசு'

ஆகியவைகளுக்குப்பின் முறையே 'கடக்க வேண்டும்' 'போன்ற' 'அடையக்கூடிய', 'கொல்ல வேண்டிய' 'குனிய வைக்க வேண்டிய,' 'நிகராக' 'அளக்கப்பட்ட' (அ) சேர்ந்த, சமமாக அளக்கப்பட்ட' என்ற பொருட்களில் வரும்.

1. நாவ்யம் (நாவா தார்யம்) 'தண்ணீர்'
   'படகினால் கடக்கப்பட வேண்டியது'
2. வயஸ்ய: (வயஸா துல்ய:) 'நண்பன்' ஒத்த வயதுடைய'
3. த$^4$ர்ம்யம் தர்மேணப்ராப்யம்
4. விஷ்ய: (விஷேண வத்$^4$ய:) 'விஷத்தால் கொல்லத் தகுந்தவன்'
5. மூல்யம் (மூலேன ஆநாம்யம்) 'விலை'
6. மூல்ய: (மூலேன ஸம:) வாங்கக்கூடியது முதலுக்குச் சமமானது. 'துணி'
7. ஸீத்யம் (ஸீதயா ஸமிதம்) 'வயல்'
8. துல்யம் (துலயா ஸம்மிதம்) ஒரே எடையைக் கொண்டது

**4.4.92** த$^4$ர்ம பதி$^2$ அர்த$^2$ ந்யாயாதனபேதே

'அதிலிருந்து வழுவாத' என்ற பொருளில் 'யத்' ஒட்டு, த$^4$ர்ம, பதி$^2$, அர்த$^2$, ந்யாய என்ற சொற்களுக்குப்பின் வரும்.

த$^4$ர்ம்யம்–நியாயமான

பத்$^2$யம்–ஆரோக்கியமான, நலந்தருகிற உணவு

அர்த்$^2$யம்–தகுந்த

ந்யாய்யம்–நியாயமான, தகுந்த

**4.4.93** ச$^2$ந்த$^3$ஸி நிர்மிதே

ச$^2$ந்த$^3$ஸ் 'விருப்பம்' (3ஆம் வேற்றுமைச் சொல்) என்ற சொல்லுக்குப்பின் 'யத்' ஒட்டு 'செய்யப்பட்டது' என்ற பொருளில் வரும்.

**4.4.94** உரஸோ அஸ் ச

3ஆம் வேற்றுமையில் நிற்கும் 'உரஸ்' 'நெஞ்சு, மார்பு' என்ற சொல்லோடு அண், யத் என்ற இரண்டு ஒட்டுக்களும் மேலே கூறிய பொருட்களில் வரும், தருவிக்கப்பட்ட சொல் ஒரு பெயராகும்.

ஔரஸ: (அண்), உரஸ்ய: (யத்) சொந்தப்பிள்ளை

**4.4.95** ஹ்ருத$^3$யஸ்ய ப்ரிய:

'நேசிக்கப்பட்ட' என்ற பொருளில் 'யத்' ஒட்டு (6ஆம் வேற்றுமைச் சொல்லான) 'ஹ்ருதய' இதயம் என்ற சொல்லுக்குப்பின் வரும்.

ஹ்ருத்$^3$ய: மனதுக்கினிய

ஹ்ருத்$^3$ய:தே$^2$ஸ': 'மனதுக்குப்பிடித்த நாடு'

ஹ்ருத்$^3$யம் வனம்–மனதுக்குப்பிடித்த காடு

**4.4.96** ப$^{3}$ந்த$^{4}$னே சர்ஷௌ

ப$^{3}$ந்த$^{4}$ன 'கட்டுதல்' என்ற பொருளில் 'யத்' ஒட்டு ஆறாம் வேற்றுமையிலமையும் 'ஹ்ருத$^{3}$ய' என்ற சொல்லுக்குப்பின் வரும். தருவிக்கப்பட்ட சொல் 'மயக்கும் மந்திரம்' ஆகும்.

ஹ்ருத்$^{3}$ய: (ஹ்ருதயஸ்ய ப$^{3}$ந்த$^{4}$னம் ருஷி:) மற்றொருவனைத் தனது ஆளுமைக்குட்பட்டவனாகக் கொண்டு வருவதற்காக உச்சரிக்கப்படும் மந்திரம். அது வஸீகரண மந்திரம் எனப்படும்.

**4.4.97** மதஜன ஹலாத் கரண ஜல்ப கர்ஷேஷு

(ஆறாம் வேற்றுமையிலமையும்) மத 'அறிவு', ஜன 'மனிதன்' ஹல 'ஏர்' ஆகியவற்றிற்குப்பின் 'யத்' ஒட்டு, முறையே அடையும் வழி (கரண), வதந்தி (ஜல்ப), இழுத்தல் (கர்ஷ)

என்ற பொருட்களில் வரும்.

மத்யம் – அறிவு பெறும் வழி

ஜன்ய:–வதந்தி

ஹல்ய:–உழப்பட்டது

**4.4.98** தத்ர ஸாது$^{4}$:

'அதில் வல்லவன்' என்ற பொருளில் 7ஆம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'யத்' ஒட்டு வரும்.

ஸாமன்ய: 'சாம வேதத்தில் தேர்ச்சி பெற்றவன்'

கர்மண்ய: 'செயலில்வல்லவன்'

**4.4.99** ப்ரதி ஜனாதி$^{3}$ப்$^{4}$ய: க$^{2}$ஞ்

'க$^{2}$ஞ்' ஒட்டு ப்ரதிஜன 'எதிராளி அல்லது ஒவ்வொரு மனிதன்' முதலிய சொற்களுக்குப்பின் மேலே கூறிய பொருளில் வரும்.

ப்ராதி ஜனீன: 'எதிராளிக்குத் தகுந்தவன்' அல்லது ஒவ்வொருத்தனுக்கும் தகுந்தவன்.

ஐத$^{3}$ம்புகீ$^{3}$ன: (இதம்புக:)

**4.4.100** ப$^{4}$க்தாண் ண:

மேலே கூறிய பொருளில் 'ண' ஒட்டு ப$^{4}$க்த 'உணவு' என்ற சொல்லுக்குப்பின் வரும்.

ப$^{4}$ாக்த: ஸாலி: 'அரிசி, உண்பதற்குத் தகுந்தது அல்லது சிறந்தது'

**4.4.101** பரிஷதே$^{3}$ா ண்ய:

பரிஷத 'அவை' என்ற சொல்லுக்குப்பின் 'ண்ய' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

பாரிஷத்$^{3}$ய: அவையில் சிறந்தவன், அல்லது அவைக்குத் தகுந்தவன்.

'ண' ஒட்டும் இச்சொல்லோடு வரும்.

பாரிஷத3: 'அவையின் நடவடிக்கையில் தேர்ச்சி பெற்றவன், மந்திரி'

**4.4.102** கத2ாதி3ப்4யஷ்ட2க்

7ஆம் வேற்றுமையிலமையும் கத2ா 'கதை' முதலியவைகளுக்குப்பின் 'ட2க்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
காதி2க: 'கதை சொல்பவன்' அதாவது அதில் தேர்ச்சி பெற்றவன்'
வைகதி2க: (விகத2ா)

**4.4.103** கு3ட3ாதி3ப்4யஷ்ட2ஞ்

'ட2ஞ்' ஒட்டு, கு3ட3 'வெல்லப்பாகு' முதலிய சொற்களுக்குப்பின் மேலே கூறிய பொருளில் வரும்.
கெ3ளடிக3க: கரும்பு அதாவது சர்க்கரை தயாரிக்கத் தகுந்தது,
கௌல மாஷிக: (குல்மாஷ) கஞ்சி தயாரிக்கத் தகுந்த பருப்பு.

**4.4.104** பத் 2யதிதி2 வஸதி ஸ்வபதே: ட3ஞ்

'ட3ஞ்' ஒட்டு பதி2 'வழி', அதிதி2 'விருந்தாளி', வஸதி 'தங்குமிடம்', ஸ்வபதி 'தன் யஜமானர்' ஆகியவைகளுக்குப்பின் மேலே கூறிய பொருளில் வரும்.
பாதே2யம்–பிரயாணத்துக்கான உணவு
ஆதிதே2யம்–விருந்தோம்பல்
வாஸதேயம்–'வசிப்பதற்குத் தகுந்த இடம்
ஸ்வாபதேயம்–செல்வம்

**4.4.105** ஸப4ாயா ய:

7ஆம் வேற்றுமையிலமையும் ஸபா 'அவை' என்ற சொல்லுக்குப்பின் மேலே கூறிய பொருளில் 'ய' ஒட்டு வரும். ஸப்4ய: 'சமூகத்துக்குத் தகுந்த, பண்பட்ட'

**4.4.106** ட3ஸ் ச2ந்த3ஸி

'ஸபா'வுக்குப்பின் வேதமொழியில் 'ட3' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
ஸபே4யோ அஸ்ய யுவா யஜமானஸ்ய வீரோ ஜாயதாம்
பண்பட்ட இளவயது வீரன், இந்த யஜமானனுக்குப்பிறக்கட்டும்.

**4.4.107** ஸமானதீர்தே2 வாஸீ

7ஆம் வேற்றுமையிலமையும் ஸமான தீர்த2 'ஒரே ஆசிரியரைக் கொண்ட' என்ற சொல்லுக்குப்பின் 'யத்' ஒட்டு 'அங்கு வசிக்கிறான்' என்ற பொருளில் வரும்.
ஸதீர்த்2ய: (ஸமானே தீர்தே2 வாஸீ)
'ஒரே வகுப்பு மாணவன். ஒரே ஆசிரியருக்கடியில் படிக்கும் (தங்கும்) மாணவர்கள்'

**4.4.108** ஸமானோத3ரே ஸ1யித ஓ சோத3ாத்த:

7ஆம் வேற்றுமையிலமையும் ஸமானோத3ர 'ஒரே கருப்பை' என்ற சொல்லுக்குப்பின் 'யத்' ஒட்டு 'அதில் படுத்திருக்கும்' என்ற பொருளில் வரும். 'ஓ' எழுத்து, உதாத்தம் பெறும்.

ஸமானோத3ர்ய: 'ஒரே வயிற்றில் பிறந்தவர்கள்'

**4.4.109** ஸோத3ராத்3ய:

7ஆம் வேற்றுமையிலமையும் ஸோத3ர 'ஒரே கருப்பை' என்ற சொல்லுக்குப்பின் 'ய' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

ஸோத3ர்ய: (ஸமான உத3ரே ஸயித:)

ஒரே வயிற்றில் பிறந்தவர்கள்

இங்கு 'ஓ' உதாத்தமாகாது

**4.4.110** ப4வே ச2ந்த3ஸி

7ஆம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'யத்' ஒட்டு, 'அங்கு இருக்கிறது' என்ற பொருளில் வேத மொழியில் வரும்.

மேத்4ய: 'மதிநுட்பமான'

வித்3யுத்ய: 'சுடர் விடுகிற'

மேத்4யாய ச வித்3யுத்யாய ச நம:

இச்சூத்திரத்திலிருந்து, இவ்வத்தியாயத்தின் இறுதி வரையில் விளக்கப்படும் சூத்திரங்கள் வேத மொழி பற்றியவை.

'ப4வே' என்ற சொல் சூ. 4.4.118 வரை தொடர்ந்து வரும்.

**4.4.111** பாதோ2 நதீ3ப்4யாம் ட்3யண்

பாத2ஸ் 'சுவர்க்க', நதீ, ஆகியவற்றிற்குப் பின், 'ட்யண்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வேதமொழியில் வரும்.

பாத்2ய: வானுலகத்துக்குரிய, தெய்வத்தன்மையுடைய நாத்3ய: ஆற்றுத்தொடர்பான

**4.4.112** வேஸ1ந்த ஹிமவத்3ப்4யாமண்

வேஸந்த 'குளம்', ஹிமவத் 'பனிமலை' ஆகியவற்றிற்குப் பின் 'அண்' ஒட்டு மேலே கூறிய பொருளில் (வேத மொழியில்) வரும்.

வைஸந்தீப்4ய: ஸ்வாஹா

ஹைமவதீப்4ய: ஸ்வாஹா

**4.4.113** ஸ்ரோதஸோ விப4ாஷா ட்3யத் ட்3யௌ

ட்யத்3, ட்ய ஒட்டுக்கள் விருப்பாக (வேத மொழியில்) ஸ்ரோதஸ் 'ஆறு' என்ற சொல்லுக்குப்பின் 'அங்கு இருப்பது' என்ற பொருளில் வரும். ஸ்ரோதஸ் இன் இறுதியசை 'அஸ்' இவ்வொட்டுக்களுக்கு முன் கெடும்.

ஸ்ரோத்ய:, ஸ்ரோதஸ்ய: 'ஆற்றிலிருப்பது'

**4.4.114** ஸக$^{3}$ர்ப$^{4}$ ஸயூத$^{2}$ ஸானுதாத்$^{3}$ யத்

(வேத மொழியில்) ஸக$^{3}$ர்ப$^{4}$ 'ஒரே கருப்பை', ஸயூத 'ஒரே மந்தை', ஸநுத 'மறைவிடம்' ஆகிய சொற்களுக்குப்பின் 'யத்' ஒட்டு 'அங்கு இருப்பது' என்ற பொருளில் வரும்.

அனுப்$^{4}$ராதா ஸக$^{3}$ர்ப்$^{4}$ய: 'தம்பி

அனுஸக$^{2}$ா ஸயூத்$^{2}$ய: இளைய நண்பன்

ஸநூத்ய: 'திருட்டுத்தனமாக' அதாவது ஒளிந்து வாழ்பவன்

**4.4.115** துக்$^{3}$ராத் க$^{4}$ன்

(வேத மொழியில்) துக்$^{3}$ர என்ற சொல்லுக்குப்பின் 'க$^{4}$ன்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

த்வமக்$^{3}$னே வ்ருஷப$^{4}$ஸ் துக்ரியாணாம்

துக்ர்ய: 'தண்ணீரில் மூழ்கியிருப்பது'

**4.4.116** அக்$^{3}$ராத்$^{3}$ ய த்

(வேத மொழியில்) 'யத்' ஒட்டு மேலே கூறிய பொருளில் அக்$^{3}$ர 'முனை' என்ற சொல்லில் வரும்.

அக்$^{3}$ர்ய–சிறந்தவன், முதலிலிருப்பவன்

**4.4.117** க$^{4}$ச்செ$^{2}$ள ச

(வேத மொழியில், அக்ர என்ற சொல்லுக்குப்பின்) க$^{4}$ச், ச$^{2}$ என்ற ஒட்டுக்கள் மேலே கூறிய பொருளில் வரும்.

அக்$^{3}$ர்யம், (யத்) அக்$^{3}$ரியம் (க$^{2}$ச்) அக்$^{3}$ரீயம் (ச$^{2}$)

**4.4.118** ஸமுத்$^{3}$ராப$^{4}$ராத்$^{3}$ க$^{4}$:

(வேத மொழியில், மேலே கூறிய பொருளில்) 'க$^{4}$' ஒட்டு, ஸமுத்$^{3}$ர, 'கடல்', அப்$^{4}$ர 'மேகம்' என்ற சொற்களுக்குப்பின் வரும்.

ஸமுத்ரிய: 'கடலுக்குரிய'

அப்$^{4}$ரிய: 'மேகத்திலிருக்கு ம்'

**4.4.119** ப$^{3}$ர்ஹிஷி தத்தம்

'கொடுக்கப்பட்டது' என்ற பொருளில் 'யத்' ஒட்டு, 7 ஆம் வேற்றுமையிலமையும் ப$^{3}$ர்ஹிஸ் என்ற சொல்லுக்குப்பின் (வேத மொழியில்) வரும்.

ப$^{3}$ர்ஹிஷ்யம் 'குஸ' என்ற புற்களின் மேல் அளிக்கப்பட்ட நைவேத்யம்'

ப$^{3}$ர்ஹிஷ்யேஷு நிதி$^{4}$ஷு ப்ரியேஷு

**4.4.120** தூ$^{3}$தஸ்ய ப$^{4}$ாக$^{3}$கர்மணீ

(வேதமொழியில்) 6 ஆம் வேற்றுமையிலமையும் 'தூத' என்ற சொல்லுக்குப்பின் அதன் பங்கு, அதன் கடமை' ஆகிய பொருட்களில் 'யத்' ஒட்டு வரும்.

தூ$^{3}$த்யம்–'தூதனின் பங்கு அல்லது கடமை'

**4.4.121** ரக்ஷோ யாதூனாம் ஹனனீ

(வேத மொழியில் 'யத்' ஒட்டு) 6ஆம் வேற்றுமையிலமையும் ரக்ஷ, யாது, ஆகிய சொற்களுக்குப்பின் 'கொல்லுங்கருவி' என்ற பொருளில் வரும்.

ரக்ஷஸ்ய, யாதவ்ய, 'ரக்ஷஸ், யாது எனப்படும் அசுரர்களைக் கொல்லுங் கருவி'

யா தே அக்னே ரக்ஷஸ்யா தனூ:

**4.4.122** ரேவதீ ஜக[3]தீ ஹவிஷ்யாப்[4]ய: ப்ரஸ'ஸ்தே[2]

(வேத மொழியில் 'யத்' ஒட்டு) 'புகழ்தல்' என்ற பொருளில் (6ஆம் வேற்றுமைச் சொல்லான) ரேவதீ 'ஒரு நட்சத்திரத்தின் பெயர்'

, ஜகதீ, ஹவிஷ்ய 'நைவேத்தியத்துக்குரிய' ஆகியவற்றிக்குப்பின் வரும்.

ரேவத்யம்–ரேவதியின் புகழ்ச்சி

ஜகத்யம்–ஜகதியின் புகழ்ச்சி

ஹவிஷ்யம்–நைவேத்தியத்திற்குகந்த பொருட்களின் புகழ்ச்சி

**4.4.123** அஸுரஸ்ய ஸ்வம்

வேதமொழியில், 'யத்' ஒட்டு, 'இயல்பு, குணம்' என்ற பொருளில் 6ஆம் வேற்றுமையிலமையும் 'அஸுர' என்ற சொல்லுக்குப்பின் வரும்.

அஸுர்யம்–'அசுரனுக்குரிய'

**4.4.124** மாயாயாமண்

வேதமொழியில் 'அண்' ஒட்டு 'அசுர' என்ற சொல்லுக்குப் பின் 'மாயா' என்ற பொருளில் வரும்.

அஸுர: 'அசுரனின் மாயை'

ஆஸுரீ (பெண்பால்)

**4.4.125** தத்[3]வானாஸாமுபத[4]ானோ மந்த்ர இதீஷ்டகாஸு

லுக் ச மதோ:

வேதமொழியில், முதல் வேற்றுமையிலமையும், 'மதுப்' ஒட்டில் முடியும், செங்கற்களையடுக்கும்போது உச்சரிக்கப்படும் மந்திரங்களுக்குப்பின் 'யத்' ஒட்டு வரும். மதுப் ஒட்டு கெடும்.

வர்சஸ்யா (வர்சஸ்வத் யத் வர்சஸ் யத்)

வர்சஸ்யா உபத[3]த[4]ாதி–'வர்சஸ்ய எனப்படும் செங்கற்களைச் சேகரிக்கிறான். வர்சஸ்ய எனப்படும் மந்திரங்களால் புனிதப்படுத்திய செங்கற்கள்'

**4.4.126** அஸ்விமான் அண்

வேதமொழியில், 'அஸ்வின்' என்ற சொல்லையுடைத்தாயிருக்கும் செங்கற்களைக்குறிக்க, 'அஸ்வின்' என்ற சொல்லுக்குப்பின் 'அண்' ஒட்டு வரும். அச்சொல்லின் 'மதுப்' ஒட்டு கெடும்.

ஆஸ்வின: ஆஸ்வினீ: (பெண்பால்)

ஆஸ்வினீருபத3த4ாதி–'அவன் அஸ்வின் செங்கற்களைச் சேகரிக்கிறான். அதாவது 'சேகரிக்குந்தறுவாயில் 'அஸ்வின்' என்ற சொல்லைக் கொண்டுள்ள மந்திரங்களை உச்சரித்துச் சேகரிக்கப்படும் செங்கற்கள்'

**4.4.127** வயஸ்யாஸு மூர்த்4னோ மதுப்

வேத மொழியில், 'மதுப்' ஒட்டு மூர்த4ன் 'தலை' என்ற சொல்லுக்குப் பின், 'வயஸ்' என்ற சொல்லைக் கொண்ட மந்திரங்களை உச்சரித்துச் சேகரிக்கப்படும் செங்கற்களைக் குறிக்க வரும்.

மூர்த4ன் வதீருபத3த4ாதி

'மூர்த4ன்வத்' என்ற சொல்லைக் கொண்ட உபதான மந்திரங்களுடன் சேகரிக்கப்பட்ட செங்கற்களை அவன் அடுக்குகிறான்.

வயஸ்யா:, மூர்த4ன்வத்ய: ஆகிய இரண்டு சொற்களும் ஒரே பொருளைக் குறிக்கும்.

**4.4.128** மத்வர்தே2 மாஸதன்வோ:

முதல் வேற்றுமையிலமையுஞ் சொற்களுக்குப்பின், 'மதுப்' ஒட்டின் பொருளில் 'யத்' ஒட்டு வேதமொழியில் வரும். தருவிக்கப்பட்ட சொல் மாதம் அல்லது உடல் என்ற பொருளைக் குறிக்கும்.

நப4ாம்ஸி வித்3யந்தே அஸ்மின் மாஸி நப4ஸ்ய:–

மேகங்கள் காணப்படும் மாதம் அதாவது ஜூன்–ஜூலை

ஸஹஸ்ய:, –பௌஷ (நவம்பர்–டிஸம்பர்)

தபஸ்ய:,–ப2ல்கு3ன (பிப்ரவரி–மார்ச்)

மத4வ்ய:–வைஸாக (ஏப்ரல்–மே)

ஓஜஸ்யா தனூ:–பலம் பொருந்திய உடல்கள்

வா: லுக3 காரே காரரேப2ாஸ் ச

சில சமயங்களில் ஒட்டு கெடும், சில சமயங்களில், அ, இ, அல்லது ர ஒட்டைப் போன்று பயன்படுத்தப்படும்.

நப4:, நப4ஸ்ய:, ஸஹ:, ஸஹஸ்ய:

இஷோ மாஸ:, ஊர்ஜோ மாஸ: (அகா)

ஸு1சிர் மாஸ: (இகார)

ஸுக்ரோ மாஸ: (ரேப2)

**4.4.129** மதே4ார் ஞ ச

'மது4' என்ற சொல்லுக்குப்பின் 'ஞ' ஒட்டும் வேதமொழியில், 'மது ப்' ஒட்டின் பொருளில் வரும். 'யத்' உம் வரும் (ச) மாத4வ: (ஞ) ம ாதவ்ய: (யத்) மது: (ஒட்டு கெடுதல்) 'வைசாக மாதம்'

மாத4வா, மத4வ்யா, மதூ4: தனூ–'ஸோம ரஸம் அருந்தத்தகுந்த உடல்கள்'

**4.4.130** ஓஜஸோ அஹனி யத்கெ$^2$ள

(வேதமொழியில்) யத், க$^2$ ஆகிய ஒட்டுக்கள் ஓஜஸ் 'பலம்' என்ற சொல்லுக்குப்பின், 'மதுப்' ஒட்டின் பொருளில் வரும். தருவிக்கப்பட்ட சொல் 'நாள்' ஐச் சுட்டும்.

ஓஜஸ்யம் அல்லது ஓஜஸீனம்

அஹ: 'பலம் பொருந்திய நாள்'

**4.4.131** வேஸோ'ர யஸ'ாதே$^3$ா ப$^4$ாத்$^3$யல்

வேதமொழியில், 'மதுப்' ஒட்டின் பொருளில் 'யல்' ஒட்டு, வேஸ'ஸ் 'சக்தி' யஸஸ், 'கீர்த்தி' என்ற சொற்களை முதல் உறுப்பினராகக் கொண்ட 'பக$^4$' என்ற சொல்லுக்குப் பின் வரும்.

வேஸோ'ர ப$^4$க்$^3$ய: ஊட்டம் கொடுக்கக்கூடிய சக்தியைக் கொண்ட

யஸோ'ாப$^4$க்$^3$ய: புகழ் வாய்ந்த

**4.4.132** க$^2$ச

வேத மொழியில், மேலே கூறிய சூழலில் 'க$^2$' ஒட்டும் வரும்.

வேஸோ'ாப$^4$கீ$^3$ய:

யஸோப$^4$கீ$^3$ய:

**4.4.133** பூர்வை: க்ருதமினயெள ச

3ஆம் வேற்றுமையிலமையும் பூர்வ 'முன்னோர்கள்' என்ற சொல்லுக்குப்பின், 'அவர்களால் செய்யப்பட்டது' என்ற பொருளில், இன, ய, க$^2$ ஒட்டுக்கள் வேத மொழியில் வரும்.

பூர்விண: (இன) பூர்வ்ய: (ய), பூர்விண: (க$^2$)

முன்னோர்களால் ஆக்கப்பட்டது. சாலை

யே யே பந்த$^2$ா: ஸவிதா பூர்வபாஸ: (ருக்வேதம்),

க$^3$ம்பீ$^4$ரேபி$^4$: பதி$^3$பி$^4$: பூர்விணேபி$^4$

**4.4.134** அப்$^3$த்$^3$பி$^4$: ஸம்ஸ்க்ருதம்

வேத மொழியில், 'யத்' ஒட்டு, அதனால் 'புனிதப்படுத்தியது' என்ற பொருளில் 3ஆம் வேற்றுமையிலமையும் அப் 'தண்ணீர்' என்ற சொல்லுக்குப்பின் வரும்.

அப்யம் (ஹவி:) 'தண்ணீரினால் புனிதப்படுத்திய பலி'

**4.4.135** ஸஹஸ்ரேண ஸம்மிதம் க$^4$:

3ஆம் வேற்றுமையிலமையும் ஸஹஸ்ர 'ஆயிரம்' த்துக்குப்பின் 'க$^4$' ஒட்டு 'சமம், ஒப்பு' என்ற பொருளில் வரும்:

ஸஹஸ்ரிய:– 'ஆயிரத்துக்குச் சமம், ஆயிரத்துக்கு ஒப்பானது'

**4.4.136** மதெள ச

'ஸஹஸ்ர' என்ற சொல்லுக்குப்பின் 'மதுப்' ஒட்டின் பொருளில் 'க' ஒட்டு வேத

**4.4.137** ஸோம மர்ஹதி ய

2ஆம் வேற்றுமையிலமையும் 'ஸோம' என்ற சொல்லுக்குப்பின் வேதமொழியில் 'ய' ஒட்டு, 'அதையடையத் தகுந்தவன் அவன்' என்ற பொருளில் வரும்.

ஸோம்யா: ப்$^{3}$ராஹ்மணா:– சோமரசம் பெறத் தகுதியுள்ளவர்கள் பிராம்மணர்கள்'

**4.4.138** மயே ச

'மயட்' ஒட்டின் பொருளில் 'ய' ஒட்டு வேதமொழியில் 'ஸோம' என்ற சொல்லுக்குப்பின் வரும்.

ஸோமமய: மது: ஸோம்யம் மது$^{4}$:

**4.4.139** மதே$^{4}$ா:

வேத மொழியில் 'மது$^{4}$' என்ற சொல்லுக்குப்பின் 'யத்' ஒட்டு 'மயட்'டின் பொருளைக் கொண்டதாக வரும். மத$^{4}$வ்யான் ஸ்தோகான்–மது$^{4}$மயான்

**4.4.140** வஸோ: ஸமூஹே ச

வேதமொழியில், 'யத்' ஒட்டு, வஸ் 'செல்வம், சிறந்தது' என்ற சொல்லுக்குப்பின் 'சேர்க்கை, கூட்டம்' என்ற பொருளில் வரும். 'மதுப்' பின் பொருளிலும் வரும்.

வஸவ்ய: 'செல்வங்களின் கூட்டு அல்லது முழுவதும் சிறப்பு வாய்ந்த

வா: அக்ஷர ஸமூஹே ச$^{2}$ந்த$^{3}$ஸ: ஸ்வார்த$^{2}$ உப ஸம்க்$^{2}$யானம்

'ச$^{2}$ந்த$^{3}$ஸ்' என்ற சொல்லுக்குப்பின், பொருள் மாற்றமடையாத ' யத்' ஒட்டு எழுத்துக்களின் சேர்க்கை, 'கூட்டு' என்ற பொருளில் வரும்.

ச$^{2}$ந்த$^{3}$ஸ்ய:

'யஜ, இதித்$^{3}$வ்யக்ஷரம்–'யஜ' இரண்டு எழுத்துக்கள்

வா: வஸூ ஸ'ப்$^{3}$த$^{3}$ாத$^{4}$பி வக்தவ்யம்

'வஸூ'வுக்குப்பின்னும், 'யத்' ஒட்டு பொருள் மாற்றமில்லாமல் வரும்.

ஹஸ்தௌ க்$^{3}$ருஹீதஸ்ய ப$^{3}$ஹூபி$^{4}$ வஸவ்யை:

வஸவ்யை:–வஸூபி$^{4}$

**4.4.141** நக்ஷத்ராத் க$^{4}$:

வேதமொழியில், 'நக்ஷத்ர' என்ற சொல்லுக்குப்பின், பொருளை மாற்றாமல் 'க$^{4}$' ஒட்டு வரும்.

நக்ஷத்ரியேப்$^{4}$ய: ஸ்வாஹா நக்ஷத்ரேப்$^{4}$ய: ஸ்வாஹா

**4.4.142** ஸர்வதேவாத் தாதில்

ஸர்வ, 'எல்லாம்' தேவ 'கடவுள்' ஆகிய சொற்களுக்குப்பின், வேதமொழியில் 'தாதில்' ஒட்டு பொருளை மாற்றாமல் வரும்.

ஸர்வதாதி:, தேவதாதி:

**4.4.143** ஸிவ ஸமரிஷ்டஸ்ய கரே

வேத மொழியில், 6ஆம் வேற்றுமையிலமையும் ஸிவ, ஸம, அரிஷ்ட என்ற சொற்களுக்குப்பின், 'தாதில்' ஒட்டு 'அவன் செய்கிறான்' என்ற பொருளில் வரும்.

ஸிவதாதி: 'நல்லதைச் செய்பவன்'

ஸந்தாதி: 'மங்களத்தைச் செய்பவன்'

அரிஷ்டதாதி: 'கெடுதியைத் தடுப்பவன்'

**4.4.144** ப$^4$ாவே ச

ஒரு நிலைமையைக் குறிக்கும்போதும் வேத மொழியில், 6ஆம் வேற்றுமையிலமையும் ஸிவ, ஸம், அரிஷ்ட ஆகியவைகளுக்குப்பின் 'தாதில்' ஒட்டு வரும்.

ஸிவதாதி:–ஆனந்த நிலை

ஸந்தாதி:–மங்களமானது

அரிஷ்டதாதி: கெடுதியேதுமில்லாத நிலை

**5.1.1** ப்ராக் க்ரீதாச் ச$^2$

இச்சூத்திரத்திலிருந்து தேனக்ரீதம் (5.1.37) வரை 'ச$^2$' ஒட்டின் பொருளைச் சுட்டும்.

இந்த 37 சூத்திரங்களில் 'ச$^2$' ஒட்டின் பலவகைப் பொருட்கள் விளக்கப்படுகின்றன. இச்சூத்திரம் அதன் பொருளைச் சுட்டுகிறது, அவ்வொட்டையல்ல.

**5.1.2** உக$^3$வாதி$^3$ப்$^4$யோ யத்

'உ' (குறில், நெடில்) வீற்றுப் பிராதிபதிகங்களுக்குப்பின்னும் 'கே$^3$ா' முதலிய சொற்களுக்குப்பின்னும், 'யத்' ஒட்டு சூ. 5.1.37 வரை விளக்கப்பட்டிருக்கும் ஒட்டுக்களின் பொருட்களில் (ப்ராக்க்ரீதீயேஷு அர்தேஷு)வரும்.

ப்ராக்க்ரீதியோ ஒட்டுக்களின் பொருட்கள் 5.1.5; 12; 16 ஆகிய சூத்திரங்களில் விளக்கப்பட்ட மூன்று வகையாகும். இச்சூத்திரம், 'ச$^2$'வைத் தடுத்து 'யத்' ஒட்டை விதிக்கிறது.

ஸங்க+யத்=ஸங்கவ்ய (6.4.146, 6.1.79).

ஸங்கவ்யம், த$^3$ாரு–

கமண்டலவ்யா ம்ருத்திகா–'பானை செய்யத் தகுந்த மண்'

க$^3$வ்யம்–'பசுக்களுக்குகந்த'

ஹவிஷ்யம்–'பலிக்குகந்த

**5.1.3** கம்ப$^3$லாச் ச ஸம்க்$^3$ஞாயாம்

'யத்' ஒட்டு (ப்ராக்க்ரீதீயார்த) 'கம்பல' என்ற சொல்லுக்குப்பின் ஒரு பெயரைச் சுட்டுமாறு வரும்.
கம்ப[3]ல்யம்–ஒரு கம்பல்ய எடை
கம்பளி அதாவது 100 பலம் கம்பளி

**5.1.4** விப[4]ாஷா ஹவி: அபூபாதி[3]ப்[4]ய:
'யத்' ஒட்டு விருப்பாக, ஹவி, அபூப முதலியபவைகளுக்குப்பின் மேலே கூறிய பொருளில் வரும்.
ஆமிக்ஷ்யம் (யத்) அல்லது ஆமிக்ஷீயம் (2 2) ததி[4]:-
(ஆமிக்ஷா) 'தயிர் பண்ணத்தகுந்த'
புரோடாஸ்யா அல்லது புரோடாஸீயா தண்டுலா:–
புரோடாஸத்துக்குகந்த அரிசி.
'ஹவி', இங்கு, வேள்வியில் படைக்கும் பொருளைக் குறிக்கிறது, 'ஹவி' யையல்ல.

வா: அன்ன விகாரேப்[4]யஸ் ச
உணவின் வேறுபாடுகளைக் குறிக்கும்போதும், 'யத்' ஒட்டு விருப்பாக வரும்.
பூப்ய (பூப), பூபீயம்–

**5.1.5** தஸ்மை ஹிதம்
4ஆம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'அதற்கு நல்லது' என்ற பொருளில் தத்தித ஒட்டு வரும்.
வத்ஸிய: கோ[3]து[4]க்–'கன்றுகளுக்கு நன்மை பயக்கும்.
அதாவது பால் கறக்கிறவன்' படவ்யம், க[3]ல்யம்.

**5.1.6** ஸரீரா வயவாத்[3] யத்
உடலின் உறுப்பைக் குறிக்குஞ் சொற்களுக்குப்பின் 'யத்' ஒட்டு 'அதற்கு நல்லது' என்ற பொருளில் வரும்.
த[3]ந்த்யம்–'பல்லுக்கு நல்லது' கண்ட்யம் தொண்டைக்கு நல்லது.

**5.1.7** க[2]லயவ மாஷ தில வ்ருஷ ப்[3]ரஹ்மணஸ் ச
'க[2]ல' முதலிய சொற்களுக்குப்பின் 'யத்' ஒட்டு 'அதற்கு நல்லது' என்ற பொருளில் வரும்.
க[2]ல்ய–'உரலுக்குகந்த'
யவ்யம், மாஷ்யம், தில்யம், வ்ருஷ்யம், ப்[3]ரஹ்மண்யம்
ஆனால், வ்ருஷ்ணே ஹிதம், ப்[3]ராஹ்மணேப்[4]யோ ஹிதம். இது தொடராகத்தான் அமையும், 'ச[2]' ஒட்டோ 'யத்' ஒட்டோ, இச்சொற்களுடன் இணைக்கப்பட்டு தத்திதச் சொற்கள் தருவிக்க இயலாது. இங்கு கூறப்படாத சொற்களும் இத்துள்ளடங்கும் என்று 'ச' சுட்டுகிறது காட்டாக ரத்[2]யம்.

**5.1.8** அஜாவிப்⁴யாம் த்²யன்
அஜ, அவி என்ற சொற்களுக்குப்பின் 'த்²யன்' ஒட்டு 'அதற்கு நல்லது' என்ற பொருளில் வரும்.
அஜத்²யா யூதி² 'மஞ்சள் மல்லிகை'

**5.1.9** ஆத்மன் விஸ்'வஜன பே⁴ாகே²ாத்தர பத³ாத் க²:
ஆத்மன், விஸ்வஜன. 'போக' என்ற சொல்லை இரண்டாவது உறுப்பினராகக் கொண்ட சொற்கள், ஆகியவைகளுக்குப்பின் 'க²' ஒட்டு 'அதற்கு நல்லது' என்ற பொருளில் வரும்.
ஆத்மனீனம்–'தனக்கு நல்லது'
விஸ்வ ஜனீனம்–'எல்லா மனிதர்களுக்கும் நல்லது'
'விஸ்வஜன' கர்மதாரயமாகும்போது தான் இவ்வொட்டு வரும்.
6ஆம் வேற்றுமை தத்புருஷத் தொகையாகவோ அல்லது பஹுவ்ரீஹியாகவோ இச்சொல்லமையும்போது 'ச²' ஒட்டுத்தான் இத்துடன் வரும்.
விஸ்வஜனீய:

வா: பஞ்ச ஜனாது பஸம்க்யானம்
'பஞ்சஜன' என்ற சொல்லுக்குப்பின்னும் 'க²' ஒட்டு வரும்.
பஞ்ச ஜனீனம்.
இங்கேயும் கர்மதாரயத்தையே குறிக்கிறது.
பஞ்சஜனீயம் (மற்ற தொகைகளில்)

வா: ஸர்வஜனாத் ட²ஞ் க²ஸ்' ச
'ஸர்வஜன' என்ற சொல்லுக்குப்பின் 'ட²ஞ்' க² ஒட்டுக்கள் வரும்.
ஸார்வஜனிகம், ஸர்வஜனீனம்
இங்கும் கர்மதாரயத்தைச் சுட்டும் மற்ற தொகைகளில் ஸர்வஜனீயம்.

வா: மஹாஜனான் நித்யம் 'ட²ஞ்' வக்தவ்ய:
'மஹாஜன' என்ற சொல்லுக்குப்பின் எப்போதுமே (கர்ம தாரயம், தத்புருஷம் இரண்டிலும்) 'ட²ஞ்' ஒட்டு வரும்.
ஆனால் ப³ஹூவரீஹியில் 'ச²' ஒட்டுத்தான் வரும்.
மஹாஜனிகம்
மஹாஜனீயம் (பஹூவரீஹி)
பே⁴ாக–மாத்ரு போகீண: தாயின் உடம்புக்கு நல்லது.
போக–'உடல்'

வா: ராஜாசார்யாப்⁴யாம் து நித்யம்
ராஜா, ஆசார்ய ஆகியவைகளைத் தொடர்ந்து நிற்கும் 'போக' என்ற சொல்லுக்குப்பின் எப்போதுமே 'ண' வரும்.

ராஜபே$^4$ாகீ$^3$ண:

வா: ஆசார்யாதணத்வம் ச

ஆசார்யபே$^4$ாகீ$^3$ன:

ராஜா, ஆசார்ய என்ற சொற்கள் தனியாக வரும்போது இவ்வொட்டு வராது, அவைகள் தொடர்ச் சொல்லாக நிற்கும். ராக்$^3$ஞே ஹிதம், ஆசார்யாய ஹிதம்

**5.1.10** ஸர்வ புருஷாப்$^4$யாம் ணட$^4$ஞௌ

ஸர்வ 'எல்லாரும்', புருஷ 'மனிதன்' ஆகிய சொற்களுக்குப்பின் முறையே 'ண' 'ட$^4$ஞ்' ஒட்டு 'அதற்கு நல்லது' என்ற பொருளில் வரும் பௌருஷேயம்

வா: ஸர்வாண்ணஸ்ய வா வசனம்

'ஸர்வ'வுக்குப்பின் 'ண' ஒட்டு விருப்பாக வரும்.

ஸர்வீயம்

வா: புருஷாத்$^3$ வத$^4$ விகார ஸமூஹ தேன க்ருதேஷ் விஷ்யதே

'புருஷ: என்ற சொல்லுக்குப்பின் 'ட$^4$ஞ்' ஒட்டு 'கொலை', 'மாற்றம்', 'கூட்டம்', அவனால் செய்யப்பட்டது' என்ற பொருட்களில் வரும்.

பௌருஷேய: மனிதக் கொலை, மாற்றம், கூட்டம், மனிதனால் செய்யப்பட்டது.

பௌருஷேயோ க்$^3$ரந்த$^2$:–'மனிதனாலெழுதப்பட்ட புத்தகம்'

**5.1.11** மாணவ சரகாப்$^4$யாம் க$^2$ஞ்

மாணவ, சரக ஆகியவைகளுக்குப்பின் 'க$^2$ஞ்' ஒட்டு 'அதற்கு நல்லது' என்ற பொருளில் வரும்.

மாணவீனம்– 'மாணவர்களுக்குகந்த'

சாரகீணம்

**5.1.12** தத$^3$ர்த$^2$ம் விக்ருதே: ப்ரக்ருதௌ

உற்பத்தி செய்யப்பட்ட பொருளைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின் 'ச$^2$' ஒட்டு 'அதையாக்குவதற்குப்பயன்படும் மூலப்பொருள்' என்ற பொருளில் வரும்

அங்க$^3$ாரீயாணீ காஷ்டானி– 'எரிப்பதற்குகந்த விறகுகள்'

ப்ராகாரீயா, இஷ்டகா: 'சுவர் கட்ட உதவும் செங்கற்கள்'

**5.1.13** ச$^2$தி$^3$ருபதி$^4$ ப$^3$லேர் ட$^4$ஞ்

ஆக்கிய பொருளைச் சுட்டும் ச$^2$தி, உபதி$^4$, பலி என்ற சொற்களுக்குப்பின் 'ட$^4$ஞ்' ஒட்டு அதையாக்குவதற்குப் பயன்படும்மூலப் பொருள் என்ற பொருளில் வரும்.

ச$^2$ாதிஷேயானி த்ருணானி

ஔபதே$^4$யம் த$^3$ாரு:

ப$^3$ாலேயாஸ் தண்டுலா:

**5.1.14** ருஷபோ⁴பான ஹோர் ஞ்ய:

ருஷப⁴, உபானஹ் என்ற உண்டாக்கிய பொருளைக் குறிக்குஞ் சொற்களுக்குப்பின் 'ஞ்ய' ஒட்டு 'அதையாக்கப்பயன்படும் மூலப்பொருள் என்ற பொருளில் வரும்.

ஆர்ஷப்⁴யோ வத்ஸ;

ஔபானஹ்யோ முஞ்ஜ:

மூலப்பொருள் 'தோல்' (சர்ம) ஆகும் போதும் 'ஞ்ய' ஒட்டு உபானஹ் என்ற சொல்லுக்குப்பின் விதிக்குப் புறம்பாக 5.1.15 விதிக்கப்பட்ட 'அஞ்' ஒட்டைத் தடை செய்து வரும்.

**5.1.15** சர்மணோ அண்

ஆக்கப்பட்ட பொருள் தோல் (சர்ம) ஆகும்போது, 'அண்' ஒட்டு, அதன் மூலப்பொருளைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின் வரும்.

வார்த⁴ம் சர்ம, லாரத்ரம் சர்ம

**5.1.16** தத³ஸ்ய தத³ஸ்மின் ஸ்யாதிதி

முதல் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் மேலே கூறிய ஒட்டுக்கள், 6ஆம் அல்லது 7ஆம் வேற்றுமைப்பொருளில் வரும். ஸ்யாத் 'ஆகும்' என்ற வினையின் கர்த்தாவாக முதல் வேற்றுமைச் சொல் அமைய வேண்டும். 'அதற்குப் போதுமான' என்ற பொருளில் மேலே கூறிய வொட்டுக்கள் வரும். (ப்ராகாரா ஆஸாமிஷ்டகானாம் ஸ்யாத்) ப்ராகாரீயா: இஷ்டகா: 'சுவரையெழுப்பப் போதுமான செங்கற்கள்' ப்ராஸாதீயம் ³தாரு: 'அரண்மனை கட்டப்போதுமான மரம்' ப்ராகாரீயோ தே³ஸ': (ப்ராகாரோ அஸ்மின் தே³ஸே' ஸ்யாத்) சுவர் எழுப்பப்போதுமான இடம்.

ப்ராஸாதீயா பூ⁴மி: 'அரண்மனை கட்டப்போதுமான நிலம்'

**5.1.17** பரிக²ாயா ட⁴ஞ்

பரிக²ா 'அகழ்' என்ற சொல்லுக்குப்பின் 'ட⁴ஞ்' ஒட்டு மேலே் கூறிய பொருட்களில் வரும்.

பாரிகே²யீ:–அகழ் கட்டுவதற்குப் போதுமான நிலம் ச², யத் ஒட்டுக்கள் இது வரையில் கூறப்பட்டது. அடுத்த சூத்திரத்திலிருந்து வேறு ஒட்டுக்கள் தொடங்கும்.

**5.1.18** ப்ராக்³ வதேஷ் ட²ஞ்

இச்சூத்திரத்திலிருந்து (தேனதுல்யம் க்ரியா சேத்வதி:)

5.1.115 வரை 'டஞ்' ஒட்டு பற்றிய விதிகள். 'தேன துல்யம் க்ரியா சேத்வதி' வரை 'டஞ்' ஒட்டு செயல்படும். சூ. 37 முதலியவற்றில் கூறப்பட்டிருக்கும் பொருட்களைச் சுட்டும்.

பாராயணிக:, தௌராயணிக:, சாந்த்³ராயணிக:

**5.1.19** ஆர்ஹா$^{3}$ அகே$^{3}$ாபுச்ச$^{2}$ ஸங்க்$^{2}$யா பரிமாணாத்$^{3}$ ட$^{2}$க்

'ட$^{2}$க்' ஒட்டு அர்ஹ

(தத$^{3}$ர்ஹதி 5.1.63) வரை (உள்ளடக்கியது) செயல்படும். கே$^{3}$ாபுச்ச அல்லது எண்ணுப்பெயர் அல்லது அளவைக்குறிக்குஞ் சொற்களைத் தவிர்த்த மற்ற இடங்களில் 'டக்' ஒட்டு பயன்படுத்தப்படும்.

ட$^{2}$க், ட$^{2}$ஞ் இரண்டு ஒட்டுக்களாலும் ஆக்கப்பட்ட சொற்களில் பொருட்கள் ஒன்றாகும் அவைகள் சுரத்தில்தான் வேறுபடும்.

நைஷ்கிகம்–நிஷ்கத்தினால் வாங்கியது ஆனால் கௌபுச்$^{2}$சிகம் இங்கு 'கோ' சுரம் பெறும்.

எண்ணுப்பெயர்–ஷாஷ்டிகம்

பரிமாண–கௌட$^{3}$விகம்

**5.1.20** அஸமாஸே நிஷ்காதி$^{3}$ப்$^{4}$ய:

நிஷ்க முதலிய சொற்கள், ஒரு தொகையின் உறுப்பினராகாமல், தனியாக நிற்கும்போது, அச்சொற்களுக்குப்பின் 'ட$^{2}$க்' ஒட்டு, தொடந்து வரும் சூத்திரங்களில் (5.1.63 வரை) கூறப்பட்ட பொருட்களில் வரும் (ஆர்ஹாத் தொடரும்) நைஷ்கிம், பாணிகம்

**5.1.21** ஸ$^{1}$தாச்ச ட$^{2}$ன் யதாவஸ$^{1}$தே

வெறும் 'நூறு' என்ற பொருளைச் சுட்டாத 'ஸ$^{1}$த' என்ற சொல்லுக்குப்பின் ட$^{2}$ன் (இக), யத் (ய) என்ற

ஒட்டுக்கள் 5.1.63 வரை விளக்கப்பட்ட பொருளில், 'ஸத' என்ற சொல் ஒரு தொகையின் உறுப்பினராக அமையாவிட்டால்)

இங்கும் ஆர்ஹாத் தொடரும்

ஸதிகம் (அ) ஸத்யம் 'நூறு நாணயங்களுக்கு வாங்கிய' ஆனால் ஸதகம் நித$^{3}$ானம்

'அஸதே' என்ற சொல் ஒட்டின் பொருளோடு தொடர்புடையது.

அடிச் சொல்லோடல்ல. ஏனென்றால் 'ஸத' என்ற சொல் எப்போதுமே 'நூறு' என்றுதான் பொருள்படும். இவ்வேறுபாட்டைக் கீழ்க்கண்ட எடுத்துக்காட்டால் விளக்கலாம்.

ஸதம்$^{4}$யாய: பரிமாணஸ்ய

க்ரந்த$^{2}$ஸ்ய ஸதகம், நூறு அத்தியாயங்களைக் கொண்ட புத்தகம்.

ஸதகம் எனப்படும். ஆனால் ஸத்யம் என்ற சொல், நூறு நாணயங்களுக்கு வாங்கிய வண்டி என்ற பொருளைக் கொடுக்கும்.இங்கு வண்டி நூற்றைக் கொண்டது அல்ல, ஆனால் புத்தகம் நூறு (அத்தியாயங்களைக்) கொண்டது.

**5.1.22** ஸங்க்$^{2}$யாயா அதிஸ$^{1}$ த$^{3}$ந்தாயா: கன்

'தி' அல்லது 'ஸத' ஆகியவைகளை யீறாகக் கொள்ளாத, எண்ணுப் பெயர்களுக்குப்பின் கன் (க) ஒட்டு 5.1.63 வரையில் கூறப்பட்ட பொருட்களில் வரும்.

வா: ககார: ப்ரத்யயோ வக்தவ்ய: சிக்ச ப்ரக்ருத்யா தே³ஸ':
'க'வும் அவ்வாறே வரும். 'நி'க்குப்பதிலியாக 'சிக்' வரும்.
நி + க = சிக் + க = சிக்க:

வா: க்லின்னஸ்ய சில் பில்லஸ் சாஸ்ய சக்ஷு ஷீ
'ல' ஒட்டு 'க்லின்ன' என்ற சொல்லுக்குப்பின் 'அதன் கண்கள்' என்ற பொருளில் வரும். சில், பில் ஆகியவைகள், 'க்லின்ன'வுக்குப் பதிலியாகும்.
சில்ல:, பில்ல:

வா: சுலாதே³ஸோ வக்தவ்ய:
'சுல்'லும் ஆதேசமாகும். சுல்ல: இவைகள் 'கண்' என்ற பொருளை ச் சுட்டும்.
சில்லே, பில்லே, சுல்லே 'நோயுள்ள கண்கள்'

**5.2.34** உபாதி⁴ப்யாம் த்யகன் ஆஸன்னா ரூட⁴யோ:
உப, ஆதி⁴ ஆகியவைகளுக்குப்பின் முறையே 'அருகில்', உயரமான' என்ற பொருட்களில் த்யகன் (த்யக) ஒட்டு வரும். தருவிக்கப்பட்ட சொல்லொரு பெயராகும்.
உபத்யாக: 'மலையடிவாரம்'
அதி⁴த்யகா: 'சமவெளி, பீடபூமி'

**5.2.35** கர்மணி க⁴டே'ா அட²ச்
7ஆம் வேற்றுமையிலமையும் கர்மன் என்ற சொல்லுக்குப்பின், தீவிரமாக ஈடுபடுதல்' என்ற பொருளில் 'அட²ச்' ஒட்டு வரும்.
கர்மட²:-'திறமையுள்ள மனிதன்'
கர்மட²:

**5.2.36** தத்³ அஸ்ய ஸம் ஜாதம் தாரகாதி³ப்⁴ய இதச்
'தாரக' முதலிய முதல் வேற்றுமையிலமையும் சொற்களுக்குப்பின் 'அதில் காணப்படும்' என்ற பொருளில் இதச் (இத) ஒட்டு வரும்.
தாரகித: நப⁴: 'நட்சத்திரங்கள் காணப்படும் இரவு'
புஷ்பிதோ வ்ருக்ஷ: பூக்கள் காணப்படும் மரம்'

**5.2.37** ப்ரமாணே த்³வயஸஜ் த³க்⁴ணஜ் மாத்ரச:
த்வயஸச் (த்வயஸ), த³க்⁴னச் (த³க்⁴ன) மாத்ரச் (மாத்ர) என்ற ஒட்டுக்கள் முதல் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'அதனளவு' என்ற பொருளில் வரும்.
ஊருத்³வயஸம், ஊருத³த்⁴னம், ஊருமாத்ரம், ஊருத்வயஸம் உத³கம்- 'தொடை வரையில் நிற்கும் தண்ணீர்'
ஜானுத்வயஸம், ஜானுதத்⁴னம், ஜானுமாத்ரம்—முழங்கால் வரை
த்³வயஸச், தக்⁴னச் என்றவொட்டுக்கள் உயரம், ஆழம் ஆகியவைகளை குறிக்கும். மட்டமான, படுக்கையானதையல்ல என்பது சிலர் கருத்து, மாத்ரச்

பொதுவான அளவு பற்றியது.

வா: ப்ரமாணே லோப வக்தவ்ய:
'அளவு' குறிக்கும் சொற்களுக்குப்பின் இவ்வொட்டு கெடும்.
ஸம: ஒரு கையளவு நீளம்
திஷ்டி:, விதஸ்தி

வா: த்[3]விகோ[3]ர் நித்யம்
எண்ணுத்தொகையோடு வரும் ஒட்டு கட்டாயமாகக் கெடும். த்விஸ[1]ம:, த்விதஸ்தி: தீர்மானமாக ஒன்றின் அளவு தெரியாதபோதிலும், இவ்வொட்டு மறையும் என்று சுட்ட நித்யம்' என்று சொல் இவ்வார்த்திகத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.
த்[3]விதி[3]ஷ்டி: 'இது இரண்டு விஷ்டி அளவு இருந்தாலும் இருக்கலாம்'

வா: உட் ஸ்தோமே வக்தவ்ய:
'ஸ்தோம'வுக்குப்பின் 'உட்' வரும்.
பஞ்சத[3]ஸஸ்தோம:, பஞ்சதஸி ராத்ரி:

வா: ஸன்ஸதோர் டி[3]னிர் வக்தவ்ய:
ஸன், ஸத் ஆகியவற்றில் முடியுஞ் சொற்களுக்குப்பின் 'டினி' வரும்.
பஞ்சத[3]ஸினோ அர்த்[3]த[4]மாஸா: த்ரிம்ஸினோ மாஸா:

வா: விம்ஸ'தேஸ்சேதி வக்தவ்யம்
விம்ஸதிக்குப்பிறகும் அதே ஒட்டு வரும்.
விம்ஸினோ அங்கிரஸ:

வா: ப்ரமாண பரிமாணப்[4]யாம்
ஸங்க்[2]யா யாஸ் சாபி ஸம்ஸயே மாத்ரஜ் வக்தவ்ய:
சந்தேகமாக இருந்தபோதிலும், ப்ரமாண, பரிமானங்களைக் குறிக்குஞ் சொற்கள், எண்கள் ஆகியவற்றிற்குப்பின் மாத்ரச் ஒட்டு வரும்.
ஸமமாத்ரம், ப்ரஸ்த[2] மாத்ரம், பஞ்சமாத்ரம்

வா: வத்யந்தாத் ஸ்வார்தே[2] த்[3]வயஸஜ் மாத்ரசௌ ப[3]ஹூலம்
'வத்' ஒட்டியீறில் கொண்ட சொற்களுக்குப்பின், த்வயஸச், மாத்ரச் ஒட்டுக்கள் பொருள் மாற்றமில்லாமல் பல வகையில் வரும்.
தாவத்த்வயஸம், தாவன் மாத்ரம்
ஏதாவத்[3]த்[3]வயஸம், ஏதாவன் மாத்ரம்

**5.2.38** புருஷ ஹஸ்திப்[4]யாமண் ச
முதல் வேற்றுமையிலமையும் புருஷ, ஹஸ்தி என்ற சொற்களுக்குப்பின் 'அண்'

ஒட்டு அதனளவு' என்ற பொருளைச் சுட்டும். 'த்வயஸச்' ஆகியவைகளும் வரும் (ச)
பௌருஷம்–'ஓராளின் உயரம் கொண்டது இது'
புருஷத்வயஸம், புருஷத3க4னம், புருஷ மாத்ரம், ஹாஸ்தினம், ஹஸ்தி த்வயஸம், ஹஸ்தித3க4னம், ஹஸ்தி மாத்ரம்.

வா: த்விகே3ார் நித்யம் லுக்
'த்விகு'வுக்குப்பின் வருமொட்டு எப்போதும் கெடும்.
த்3விகு3புருஷமுத3கம்,
த்விஹஸ்தி

**5.2.39** யத் தத்3 ஏதேப்4ய: பரிமாணே வதுப்
முதல் வேற்றுமையிலமையும் யத், தத் ஆகியவைகளுக்குப்பின் 'வதுப்' மேலே கூறிய பொருளில் வரும்.
யாவான் 'இத்தனையளவு' (யத் வதுப்) 'ஏதாவான்'

வா: வதுப் ப்ரகரணே யுஷ்மதஸ்மத்3ப்4யாம் ச2ந்த3ஸி ஸாத்ருஸ்'ய உபஸங்க்2யானம்
வேதமொழியில் 'யுஷ்மத், அஸ்மத்' ஆகிய சொற்களுக்குப்பின் 'வதுப்' இதைப் போன்ற என்ற பொருளைச் சுட்டும். ந த்வா வா அன்யோ தி3வ்யோ ந பார்தி3வோ
ந ஜாதோ ந ஜனிஷ்யதே: த்வாவத:
புருஷஸோ யக்கும் விப்ரஸ்ய மாவத:

**5.2.40** கிமித3ம் ப்4யாம் வா க4:
கிம், இதம் என்ற சொற்களுக்குப்பின் வரும் 'வதுப்' ஒட்டின் 'வ்' க்குப் பதிலியாக 'க4' (இய்) வரும்.
கிம் + வதுப் = கீ + வதுப் (6.3.90)
க் + க4துப் = க் + இய் + த் = கியத்
இயத்

**5.2.41** கிம: ஸம்க்2யா பரிமாணேட3தி ச
முதல் வேற்றுமையிலமையும் 'கிம்' என்ற சொல்லுக்குப்பின் டதி (அதி) வதுப், ஒட்டுக்கள் 'எண் அளவு' (அதாவது எத்தனை) என்ற பொருளில் வரும்.
கதி ப்3ராஹ்மணா:, கியந்தோ ப்3ராஹ்மணா:
'எத்தனை பிராம்மணர்கள்'

**5.2.42** ஸங்க்2யாயா அவயவே தயப்
'இத்தனை பகுதிகளைக் கொண்டது அது' என்ற பொருளில் தயப் ( தய) ஒட்டு எண்ணுப் பெயருக்குப்பின் வரும்.

பஞ் சதயம்–ஐந்து பகுதிகளைக் கொண்ட
சதுஷ்டயம்–நான்கு பகுதிகளைக் கொண்ட
சதுஷ்டயீ

**5.2.43** த்[3]வித்ரிப்[4]யாம் தயஸ்யாயஜ்வா
த்வி, த்ரி என்ற எண்ணுப் பெயர்களுக்குப்பின் வரும். 'அயச்' ஒட்டுக்குப் பதிலியாக, விருப்பாக 'அயச்' வரும்.
த்வயம் அல்லது த்விதயம், இரண்டு பகுதிகளைக் கொண்ட 'த்ரிதயம், த்ரயம்'

**5.2.44** உப[4]ாது[3]த[3]ாத்தோ நித்யம்
'உப[4]' இரண்டும், இருவர் என்ற சொல்லுக்குப்பின் வரும் தயப் 'புக்கு' 'அயச்' ஆதேசம் கட்டாயமாக வரும். அது உதாத்தம் பெறும்.
உப[4]யோ மணி:, உப[4]யே தேவமனுஷ்யா:

**5.2.45** தத[3]ஸ்மின்னதி[4]கமிதி த[3]ஸாந்தாட்[3]ட[3]:
'த[3]ஸன்' இல் முடியும் எண்ணுப் பெயர்களுக்குப்பின் (முதல் வேற்றுமையிலமையும்) ட[3] (அ) ஒட்டு இது 'அதில் மிகுதியாகும்' என்ற பொருளில் வரும்.
ஏகாதஸம் ஸ'தம் 'இந்நூற்றில், பதினொன்று அதிகம்' அதாவது நூற்று பதினொன்று.

**5.2.46** ஸத[3]ந்த விம்ஸ[1] தேஸ்[1] ச
'ஸத்' தில் முடியுஞ் சொற்களுக்குப் பின்னும் விம்ஸதி '20' என்ற சொல்லுக்குப்பின்னும் 'ட' ஒட்டு வரும் (மேலே கூறிய பொருளில்) இறுதி, அத், அதி கெடும்.
த்ரிம்ஸம் ஸதம்
விம்ஸம் ஸதம்

வா: தத[3]ந்தாத[3]பி இதி வக்தவ்யம்
'விம்ஸதி'யிறுதியுறுப்பினராக நிற்கும் தொகைக்குப்பின்னும் அவ்வாறே
ஏகவிம்ஸம் ஸதம்

வா: ஸங்க்[2]யாக்[3]ரஹணம் ச கர்தவ்யம்
இது எண்ணுப் பெயர்களுக்குத்தான். ஆகையால் கோவிம்ஸதி ரதி[4] கா அஸ்மின் கோஸத்தே இதி, இங்கு வராது.

**5.2.47** ஸங்க்[2]யாயா கு[3]ணஸ்ய நிமானே மயட்
முதல் வேற்றுமையிலமையும் எண்ணுப் பெயருக்குப்பின் மயட் (மய) ஒட்டு ஒன்றுக்கு [illegible]லியாகக் கொடுக்கப்படும் மற்றொரு பொருளைச் சுட்டும்போது, 'இதைவிட மற்றது இத்தனை மடங்கு அதிகம்' அல்லது இதன் விலையின்

பகுதி. மற்றொன்றின் அத்தனை மடங்குக்கு சமம்' என்ற பொருளில் வரும்.
யவானாம் த்3வெள ப4ாகெ3ள நிமானமஸ்ய
உத3ஸ்வித்3 ப4ாக3ஸ்ய த்3விமயம் உதஸ்வித் யவானாம்
பார்லியின் ஒரு பங்கின் விலை, உதஸ்விதத்தின் இரண்டு மடங்காகும்.

வா: நிமேயே சாபி த்3ருஸ்'யதே
இவ்வொட்டு, வாங்கும் அல்லது இரண்டு பொருட்களின் ஒப்பீடான மதிப்பையும் குறிக்கும்.
உதஸ்விதோ த்3வெள ப4ா3கெள நிமேமஸ்ய
யவபாக3ஸ்ய த்3விமயா: த்விமயா யவா உத3ஸ்வித:
உதஸ்விதோ த்3வெள குணா நிமேயெளயேஷா
மேக குணானாம் யவானாம்
'உதஸ்வித'த்தின் பண்டமாற்று மதிப்பு பார்லியின் இரண்டு மடங்காகும்.
நிமான–பண்டமாற்றும் பொருள்
நிமேய–மாற்றாக ஏற்றுக் கொண்ட பொருள்

**5.2.48** தஸ்ய பூரணே ட3ட்
6ஆம் வேற்றுமையிலமையும் எண்ணுப் பெயருக்குப்பின் 'டட்' (அ) ஒட்டு, 'அதனை முழுதாக்குதல்' என்ற பொருளில் வரும்.
ஏகாத3ஸ: பதினொன்றாவது.
அதாவது பத்தோடு சேர்க்கப்பட்ட ஒன்று பதினொன்று முழுதாக்குகிறது.

**5.2.49** நாந்தாத் அஸம்க்2யாதோ மட்
'ன்' ஈற்று எண்ணுப் பெயரோடு, 'டட்' ஒட்டு இணைக்கும்போது, அவ்வொட்டுக்குமுன் 'மட்' ஆகமமாகும். மற்றொரு எண்ணுப்பெயர், 'ன்' ஈற்று எண்ணுப் பெயருக்கு முன் நிற்காமலிருந்தால்தான் இவ்விதி செயற்படும்.
பஞ்சம: 'ஐந்தாவது'
ஆனால் விம்ஸ: (ஈறு 'ன்' அல்ல)
ஏகாதஸ: (எண்ணுப் பெயர் முன் நிற்கிறது)

**5.2.50** த2ட்சச் ச2ந்த3ஸி
மேலே கூறிய சூழலில், வேதமொழியில் 'த2ட்' ஆகமம் ஆகும். 'மட்'டும் ஆகமமாகும்.
பஞ்சத2: ஸப்தத2: அல்லது பஞ்சம:, ஸப்தம:

**5.2.51** ஷட் கதி கதிபய சதுராம் து2க்
ஷட், கதி, கதிபய, சதுர் ஆகிய சொற்களுக்குப்பின்னிணைக்கப்படும் 'டட்' ஒட்டுக்கு முன் 'து2க்' ஆகமமாகும்.
ஷஷ்ட2: 'ஆறாவது'
கதித2:, கதிபயத2:, சதுர்த2:

வா: சதுரஸ்ச2யதாவாத்3ய க்ஷர லோபஸ்ச
'சதுர்' என்ற சொல்லுக்குப்பின் ச2 (ஈய), யத் (ய) ஒட்டுக்கள் வரும் அச்சொல்லின் முதலெழுத்து கெடும். துரீய:, துர்ய:

**5.2.52** ப3ஹு பூகே3ா க3ண ஸங்க4ஸ்ய திது2க்
ப3ஹு, பூகே3ா, க3ண, ஸங்க4 ஆகியவைகளுக்குப்பின் தொடரும் 'டட்' ஒட்டுக்கு முன் திது2க் ஆகமமாகும்.
ப3ஹு தித2:, பூகதித2:, கணதித2:, ஸங்க4தித2:

**5.2.53** வதோரிது2க்
'வத்' ஈற்றுச் சொல்லின்பின் இணைக்கப்படும் 'டட்' ஒட்டுக்கு முன் 'இது2க்' ஆகமமாகும்.
யாவதித2:, தாவதி2த2:

**5.2.54** த்3வேஸ் தீய:
'த்2வி'க்குப்பின் 'தீய' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
த்3விதீய: 'இரண்டாவது'

**5.2.55** த்ரே: ஸம்ப்ரஸாரணம் ச
'த்ரி'க்குப்பின் மேலே கூறிய ஒட்டு வரும்போது அடிச் சொல், உயிராக்கம் நிகழும்.
த்ரி + தீய = த்ரு + தீய = த்ருதீய 'மூன்றாவது'

**5.2.56** விம்ஸத்யாதி3ப்4யஸ் தமட்3 அன்யதரஸ்யாம்
'விம்ஸதி' முதலியவைகளுக்குப்பின் 'தமட்' விருப்பாக ஆகமமாகும் (மேற்கூறிய பொருளில்)
விம்ஸதி தம: இருபதாவது அல்லது விம்ஸ1:, ஏக
விம்ஸதிதம: ஏகவிம்ஸ1:

**5.2.57** நித்யம் ஸதாதி3 மாஸார்த4மாஸ ஸம்வத்ஸராத் ச
'ஸத' முதலியவைகளுக்குப்பின்னும், மாஸ அர்த4மாஸ, ஸம்வத்ஸர ஆகியவைகளுக்குப்பின்னும் கட்டாயமாக, 'தமட்' ஆகமம் 'ட3ட்' ஒட்டுக்குமுன் மேலேகூறிய பொருளில் வரும்.
ஸததம: 'நூறாவது'
மாஸதமோ தி3வஸ: 'மாதத்தினிறுதிநாள்'
அர்த4மாஸதம:, ஸம்வத்ஸர தம:

**5.2.58** ஷஷ்ட்யாதே3ஸ்1 சாஸங்க்2யாதே3:
'ஷஷ்டி' முதலியவைகளுக்கு முன் வேறு எண்ணுப் பெயர் நிற்காமலிருந்தால்,

'தமட்' ஆகமம் 'டட்' ஒட்டுக்கு முன், ஷஷ்டி முதலியவைகளுக்குப்பின் கட்டாயமாக வரும்.
ஷஷ்டிதம:, ஸப்ததிதம:
ஆனால் ஏகஷஷ்ட: அல்லது ஏகஷஷ்டிதம: (5.2.56)

**5.2.59** மதௌ ச$^{2}$: ஸூக்த ஸாம்னோ:
ஸூக்தம், ஸாமன் ஆகியவற்றைச் சுட்ட, பிராதிபதிகத்துக்குப்பின், ச$^{2}$ (ஈய) ஒட்டு 'மதுப்' ஒட்டின் (5.2.94) பொருளில் வரும்.
அச்சாவாகீயம் ஸூக்தம் – 'அச்சாவாக என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கும்'
சூக்தம், மித்ராவாருணீயம்
யக்$^{3}$ ஞாயக்ஞீயம் ஸாம

**5.2.60** அத்$^{4}$யாயானுவாகயோர் லுக்
அத்யாயம், அனுவாகம் ஆகியவைகளைச் சுட்டும்போது, பிராதிபதிகத்துக்குப்பின் வரும் 'மதுப்'பின் பொருளைக் குறிக்கும் ஒட்டான 'ச$^{2}$' கெடும்.
க$^{3}$ர்த$^{3}$ ப$^{4}$ாண்டோ அத்யாய: அல்லது
அனுவாக: க$^{3}$ர்த$^{3}$ பாண்டீய:
தீ$^{3}$ர்க$^{4}$ ஜீவித: அல்லது தீ$^{3}$ர்க$^{4}$ஜீவீய:

**5.2.61** விமுக்தாதி$^{3}$ப்$^{4}$யோ அண்
மேலே கூறப்பட்ட சூழலில், விமுக்த முதலிய சொற்களுக்குப் பின், 'மதுப்' ஒட்டின் பொருளில் 'அண்' வரும்.
வைமுக்த அத்யாய:/அனுவாக:
தைவாஸுர அத்யாய:/அனுவாக:

**5.2.62** கோ$^{3}$ஷத$^{4}$ாதி$^{3}$ப்$^{4}$யே வுன்
'கோஷத' முதலிய சொற்களுக்குப்பின் 'வுன்' ஒட்டு 'மதுப்' ஒட்டின் பொருளில் அத்யாயம் அல்லது அனுவாகம் என்பதைக் குறிக்க வரும்.
கோஷத$^{3}$கோ அத்யாய:/அனுவாக:
மாதரிஸீவக: அத்யாய:/அனுவாக:

**5.2.63** தத்ர குஸ'ல: பத$^{2}$:
7ஆம் வேற்றுமையிலமையும் பதி$^{2}$ன் என்ற சொல்லுக்குப்பின் 'வுக' ஒட்டு 'அதில் திறமையுள்ளவன் அல்லது தேர்ச்சி பெற்றவன்' என்ற பொருளில் வரும்.
பத$^{2}$க: (பதி$^{2}$ன +வுன் = பத்$^{2}$ + வுன் (6.4.144) = பதி$^{2}$ + அக 7.1.1)

**5.2.64** ஆகர்ஷாதி$^{3}$ப்$^{4}$ய: கன்

'ஆகர்ஷ' முதலிய ஏழாம் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'கன்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.

ஆகர்ஷக:, த்ஸருக:

**5.2.65** த$^{4}$ன ஹிரண்யாத் காமே

ஏழாம் வேற்றுமையிலமையும் த$^{4}$ன, ஹிரண்ய என்ற சொற்களுக்குப்பின் 'கன்' ஒட்டு, 'அதன் மேலே ஆசை' என்ற பொருளில் வரும்.

த$^{4}$னக: 'செல்வத்தை விரும்புபவன்'

ஹிரண்யக: 'தங்கத்தை விரும்புபவன்'

**5.2.66** ஸ்வாங் கே$^{3}$ப்$^{4}$ய: ப்ரஸிதே

7ஆம் வேற்றுமையிலமையும் உடலின் ஒருறுப்பைச் சுட்டும் சொல்லுக்குப்பின் 'கன்' ஒட்டு, 'அதைக் கவனித்துக் கொள்கிறான்' என்ற பொருளில் வரும்.

கேஸக: 'தலை முடியைக் கவனித்துக் கொள்பவன்'

கேஸ$^{1}$நக$^{2}$க, தந்தௌஷ்டக:

**5.2.67** உத$^{3}$ராட்ட$^{2}$க் ஆத்$^{3}$யதே

7ஆம் வேற்றுமையிலமையும் உதர, 'வயிறு' என்ற சொல்லுக்குப்பின் 'டஞ்' ஒட்டு, 'பெருந்திண்டி தின்கிற' அதிகப் பசியுள்ள' என்ற பொருளில் வரும்.

ஔத$^{3}$ரிக: (அதாவது ஆத்$^{3}$ன:)

'அதிகப் பசியுள்ளவள்'

ஆனால் உதரக: 'வயிற்றைப் பற்றிய'

**5.2.68** ஸஸ்யேன பரிஜாத:

மூன்றாம் வேற்றுமையிலமையும் ஸஸ்ய என்ற சொல்லுக்குப்பின் 'கன்' ஒட்டு 'மிகச் சிறந்த' என்ற பொருளில் வரும்.

ஸஸ்யக: ஸாலி: 'நல்ல அரிசி'

வஸ்யக: மணி: 'சிறப்பான ரத்னம்'

**5.2.69** அம்ஸம் ஹாரீ

இரண்டாம் வேற்றுமையிலமையும் 'அம்ஸ 'பாகம்' என்ற சொல்லுக்குப்பின் 'கன்' ஒட்டு 'அதை எடுத்துக் கொள்பவன்' என்ற பொருளில் வரும்.

அம்ஸ$^{1}$க: வாரிசு, அம்ஸக: புத்ர

'சொத்தின் பாகம்பெற உரிமையுள்ளவன்'

**5.2.70** தந்த்ராத் அசிராபஹ்ருதே

ஐந்தாம் வேற்றுமையிலமையும் தந்த்ர 'தறி' என்ற சொல்லுக்குப்பின் 'கன்' ஒட்டு 'அண்மையில் அதிலிருந்து எடுக்கப்பட்டது' என்ற பொருளில் வரும்.

தந்த்ரக: பட: 'தறியிலிருந்து அண்மையில் எடுக்கப்பட்ட துணி, வெளுக்காத

துணி'
தந்த்ர: ப்ராவார: 'புது உடை'

**5.2.71** ப்ராஹ்மய கோஷ்ணிகே ஸம்க்3ஞாயாம்
ப்ராஹ்மணக, உஷ்ணிக என்ற சொற்கள் பெயரைச் சுட்டும்போது நிபாதனமாகும்.
ப்3ராஹ்மணகோ தே3ஸ1: 'பிச்சை எடுத்துப் பிழைக்கும் பிராம்மணர்கள் வசிக்குமிடம்'
உஷ்ணிகாயவாசு3:

**5.2.72** ஸீதோஷ்ணாப்4யாம் காரிணி
ஸீத 'குளிர்' உஷ்ண 'சூடு' ஆகியவற்றிற்குப்பின் 'க்ன்' ஒட்டு அதைச் செய்பவன்' என்ற பொருளில் வரும்.
ஸீதக: 'சோம்பேறி'
உஷ்ணக: 'சுறுசுறுப்பாக வேலை செய்பவன், திறமைசாலி'

**5.2.73** அதி4கம்
அதி4கம் 'நிறைய', மிகுதி' என்ற சொல் நிபாதனம்.
அத்4யாரூட4: கன் அதி4க: (ஆரூட கெடும்)
அதி4கோ த்3ரோண: க2ார்யாம்
க2ாரியைவிட த்3ரோன பெரியது

**5.2.74** அனுகாபி4கா பீ4க: கமிதா
'கன்' ஒட்டிணைத்தாக்கப்பட்ட சொற்களான அனுக, அபி4க, அபி4கஎன்ற சொற்கள் 'விரும்புகிற, இச்சைப்படி நடக்கிற' என்ற பொருளின் நிபாதனங்களாகும்.

**5.2.75** பார்ஸ்வேனாம் விச்1ச2தி
மூன்றாம் வேற்றுமையிலமையும் பார்ஸ்வ 'வளைந்த பொருள்' என்ற சொல்லுக்குப்பின் 'கன்' ஒட்டு 'அதனால் ஒன்றையடைய முயல்கிறான்' என்ற பொருளில் வரும்.
பார்ஸ்லக: 'ஏமாற்றுபவன், கண்கட்டு வித்தைக்காரன்'

**5.2.76** அய: ஸூல தண்டாஜினாப்யாம் ட2க்ட2ஞௌ
அய: ஸூலிக: 'பலாத்கார முறையில் ஒன்றையடைய முயல்பவன்'
தண்டாஜினிக: வெளிவேஷம் அல்லது பாசாங்கு செய்து ஒரு பொருளையடைய முயல்பவன்'

**5.2.77** தாவதித2ம் க்3ரஹணம் இதி லுக்3 வா
'பல தடவை முயற்சி செய்து ஒரு பொருளையடைதல்'

என்ற பொருளில் 'கன்' ஒட்டு எண்ணுப் பெயருக்குப்பின் வரும். அவ் வொட்டு விருப்பாகக் கெடும்.
த்3விகம் க்3ரஹணம் அல்லது த்விதீயகம் க்3ரஹணம்
'இரண்டாவது முயற்சியில் அந்த அறிவைப் பெறுதல்.
இரண்டாவது தடவையில் வெற்றிகரமாக அதில் திறமை பெற்றான்.

வா: தாவதிதே2ன க்3ருஹ்ணாதி இதி வக்தவ்ய: பூரண ப்ரத்யயஸ்ய நித்யம் லுக்.
'கன்' ஒட்டிணைத்து ஆக்கப்பட்ட சொல், பல தடவை முயற்சி செய்து அவ்வறிவு பெற்ற ஆள் என்ற பொருளைச் சுட்டும்போது 'பூரண (எண் வரிசை முறை சுட்டும்) ஒட்டு கட்டாயமாக கெடும்.
ஷட்க: தேவதத்த: ஆறு முறை முயற்சி செய்து அப்புத்தகத்தைப் புரிந்து கொண்டவன் தேவதத்தன்.

**5.2.78** ஸ ஏஷாம் க்3ராமணி:
முதல் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'க' ஒட்டு, 'அவன் அவர்களுடைய கிராமத் தலைவன்' என்ற பொருளில் வரும்.
தே3வத3த்தகா: 'அவர்களுடைய கிராமத் தலைவன் தேவதத்தன்'

**5.2.79** ஸ்1ருங்க2லம் அஸ்ய ப3ந்தனம் கரபே4
முதல் வேற்றுமையிலமையும் ஸ்ருங்க2ல என்ற சொல் லுக்குப்பின் 'கன்' ஒட்டு 'இது அதன் கால் சங்கிலி, விலங்கு' என்ற பொருளில் வரும். ஆக்கப்பட்ட சொல் ஒட்டகத்தின் குட்டியென்று பொருள்படும்.
ஸ்ருங்க2லக: 'கால் சங்கிலி, இதன் தடை. அதாவது ஒட்டகக் குட்டி'

**5.2.80** உத்க உன்மான:
'உத்'தோடு 'கன்' ஒட்டுச் சேர்த்து ஆக்கப்பட்ட சொல்லான 'உத்க' 'ஏங்கு', ஆவலுடன் விரும்பு' என்ற பொருளில் நிபாதனமாகும்.
உத்க: தேவதத்த: உத்ஸீக: ப்ரவாஸீ

**5.2.81** காலப்ரயோஜனாத்3ரோகே
காலம் அல்லது காரணம் அல்லது விளைவைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின் 'கன்' ஒட்டு, ஆக்கப்பட்ட சொல், ஒரு நோயைக் குறிக்கும்போது வரும்.
த்3வித்'யக: ஜ்வர: 'ஒரு நாள் விட்டு ஒருநாள் வரும் காய்ச்சல்'
விஷ்புஷ்பக: ஜ்வர: விஷப்பூவினால் ஏற்படும் காய்ச்சல் (ப்ரயோஜனம்)
உஷ்ணக: சூடு உண்டாக்கும் காய்ச்சல்

**5.2.82** தத3ஸ்மின் அன்னம் ப்ராயே ஸம்க்3ஞாயாம்
முதல் வேற்றுமையிலமையும் 'உணவு' என்ற சொல்லுக்குப் பின் 'கன்' ஒட்டு 'இது குறிப்பிட்ட காலத்துக்குரிய குறிப்பிட்ட உணவு' என்ற பொருளில் வரும்.

தருவிக்கப்பட்ட சொல் ஒரு பெயராகும்.
கு$^{3}$டாபூபிகா பௌர்ணமாஸீ–'வெல்லத்தினால் தயாரிக்கப்பட்ட ஆப்பம் உண்ணவேண்டிய பௌர்ணமி'
திலா பூபிகா பௌர்ணமாஸீ.

வா: வடகேப்$^{4}$ய: இனி வக்தவ்ய:
'வடக'வுடன் 'இனி' ஒட்டு அதே பொருளில் வரும்.
வடகீனீ பௌர்ண்மாஸீ

**5.2.83** குல்மாஷாத் அஞ்
'குல்மாஷ' என்ற சொல்லுக்குப்பின் 'அஞ்' ஒட்டு மேலே கூறிய பொருளில் வரும்.
கௌல்மாஷீ பௌர்ணமாஸீ

**5.2.84** ஸ்ரோத்ரியன் ஸ்ச$^{2}$ந்தே$^{3}$ா அதீ$^{4}$தே
'வேதம் படிப்பவன்' என்ற பொருளில் 'ஸ்ரோத்ரியன்' என்ற சொல் நிபாதனமாகும்.
ஸ்ரோத்ரியோ ப்$^{3}$ராஹ்மண:
'வேதம் படித்த பிராம்மணன்'
'ஸ்ரோத்ரியன்' இனின் இறுதி 'ன்' சுரத்துக்காக.

**5.2.85** ஸ்ராத்$^{3}$த$^{4}$மனேன பு$^{4}$க்தமினி ட$^{2}$னௌ
'ஸ்ராத்$^{3}$த$^{4}$' என்ற சொல்லுக்குப்பின் இனி (இன்), டன் (இக), என்ற வொட்டுக்கள் 'அவனால் இது உண்ணப்பட்டது' என்ற பொருளில் வரும்.
ஸ்ராத்$^{3}$தீ$^{4}$ அல்லது ஸ்ராத்$^{3}$தி$^{4}$க:
'ஸ்ராத்தம் உண்டவன்'

**5.2.86** பூர்வாத் இனி:
'பூர்வ'வுக்கு முன் 'இனி' ஒட்டு 'அவனால் முன்பு செய்யப்பட்டது' என்ற பொருளில் வரும்.
பூர்வீ 'முதலில் சென்றவன்'

**5.2.87** ஸபூர்வாச் ச
மேலே கூறிய பொருளில், 'பூர்வ' என்ற சொல் மற்றொரு சொல்லைத் தொடர்ந்து நிற்கும்போதும் 'இனி' ஒட்டு வரும். க்ருத பூர்வீ கடம்–'முன்பு பாய் செய்பவன்'

**5.2.88** இஷ்டாதி$^{3}$ப்$^{4}$யஸ் ச
'இஷ்ட' முதலியவைகளுக்குப்பின்னும் 'இனி' ஒட்டு மேலே கூறிய பொருளில்

வரும்.

இஷ்டீ யக்[3]ஞே 'யாகம் பண்ணினவன்', பூர்த்தீ ஸ்'ராத்[3]தே[4]

**5.2.89** ச[2]ந்த[3]ஸி பரிபந்தி[2] பரிபரிணௌ பர்யவஸ்த[2]ரதரி

பரிபந்தி[2]ன், பரிபரின் ஆகிய சொற்கள் வேத மொழியில் (இனி ஒட்டு இணைத்து ஆக்கப்பட்ட) எதிரி என்ற பொருளில் நிபாதனமாகும்.

மா த்வா பரிபந்தி[2]னோ விதன்

மா த்வா பரிபரிணோ விதன்

'உனது பகைவர்கள் உன்னைத் தெரிந்து கொள்ளாமலிருக்கட்டும்'

**5.2.90** அனுபதி[3] அன்வேஷ்டோ

'தொடர்ந்து செல், தேடு' என்ற பொருளைச் சுட்டும் 'இனி' ஒட்டிணைத்து ஆக்கப்பட்ட' 'அனுபதின்' என்ற சொல் நிபாதனமாகும்.

அனுபதீ க[3]வாம்–பசுவைத் தொடர்ந்து செல்பவன்'

**5.2.91** ஸாக்ஷாத் த்[3]ரஷ்டரி ஸம்க்[3]ஞாயாம்

'ஸாக்ஷாத்' என்ற சொல்லுக்குப்பின் 'இனி' ஒட்டு 'பார்வையாளர்' என்ற பொருளில் வரும். அது ஒரு பெயராகும்.

ஸாக்ஷீ–'நேரில் பார்த்தவர். சாட்சி'

**5.2.92** க்ஷேத்ரியச் பரக்ஷேத்ரே சிகித்ஸ்ய:

வேறு உடலில் (பரக்ஷேத்ரே) குணப்படுத்த இயலும் (சிகித்ஸ்ய) என்ற பொருளைச் சுட்டும் 'க்ஷேத்ரியச்' என்ற சொல் ஒரு நிபாதனம்.

க்ஷேத்ரிய: வ்யாதி[4]: 'குணப்படுத்த முடியாத நோய்'

அதாவது, இந்த ஜன்மத்தில் குணப்படுத்த முடியாதது:

க்ஷேத்ரியம் குஷ்டம்

**5.2.93** இந்த்[3]ரியம் இந்த்[3]ர லிங்கம் இந்த்[3]ர த்[3]ருஷ்டம்

இந்த்[3]ரஸ்ஷ்டம் இந்த்ர[3]ஜூஷ்டம் இந்த்[3]ர [3]தத்தமதி வா 'இந்த்[3]ரியம்' என்ற சொல் ஒரு நிபாதனமாகும். அதன் பொருட்கள் வருமாறு (1) அதனால் தன்னை யூகித்தல் (இந்த்ரலிங்கம்) (2) தன்னால் பார்க்கப்பட்டது (இந்த்[3]ர'த்[3]ருஷ்டம்) (3) தன்னால் உண்டாக்கப்பட்டது (இந்த்ரஸ்ருஷ்டம்) (4) தன்னால் வளர்க்கப்பட்டது (இந்த்ரஜூஷ்டம்) (5) தன்னால் கொடுக்கப்பட்டது (இந்த்[3]ரதத்தம்) (6)

**5.2.94** தத[3]ஸ்யாஸ்த்யஸ்மின்னிதி மதுப்

முதல் வேற்றுமைச் சொல்லுக்குப்பின் 'மதுப்' ஒட்டு, 'அது அவனுடையது, அது அவனிடமிருக்கிறது' என்ற பொருளில் வரும்.

மதுப் ஒட்டு கிழமைப் பொருளில் வரும்.

கோமத்–பசுவுடையவன்

வ்ருக்ஷவான் பர்வத: 'மரங்களையுடைய மலை'
'மதுப்' ஒட்டு கீழ்க்கண்ட பொருட்களில் பயன்படுத்தப்படும்.

1) பூமன–'மிகுதி' கோமான் 'பசுவளமுள்ள'
2) நிந்தா 'நிந்தனை' குஷ்டி
3) ப்ரஸம்ஸா 'புகழ்ச்சி' ரூபவதி 'அழகான'
4) நித்யோக 'இயற்கையாயமைபப்பெற்ற' க்ஷீரிணோ வ்ருக்ஷ: 'சாறுள்ள மரம்'
5) அதிஸாயன–அதிகமாகவுள்ள, உதரிணீ கன்யா 'சூலுற்ற பெண்'
6) ஸம்ஸர்க[3] 'உடனிருத்தல்' தண்டின் 'தண்டத்தை வைத்துக் கொண்டிருப்பவன்'
7) அஸ்திவிவக்ஷா–'இருத்தல் என்ற உணர்வு 'அஸ்திமத்–பொருளுடையவன்

வா: குணவசனேப்[4]யோ மதுப் லுக் வக்தவ்ய
குணத்தைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின் நிற்கும் 'மதுப்' ஒட்டு கெடும்.
ஸுக்ல: பட: வெளுத்த ஆடை
க்ருஷ்ண:

**5.2.95** ரஸாதி[3]ப்யஸ்[1] ச
'ரஸ' முதலியவைகளுக்குப்பின்னும் 'மதுப்' ஒட்டு மேற்கூறிய பொருளில் வரும்.
ரஸவான், 'சாறுள்ள', ரூபவான் 'அழகுடையவன்'

**5.2.96** ப்ராணிஸ்த[2]த[3]தோ லஜன்யதரஸ்யாம்
உயிரினங்களில் காணப்படுமொன்றைக் குறிக்கும் 'ஆ' வீற்றுச் சொல்லுக்குப்பின் 'லச்' ஒட்டு 'மதுப்' ஒட்டின் பொருளில் விருப்பாக வரும்.
சூடால:, சூடாவான் 'குடுமியுள்ளவன்'
கர்ணிகால:, கர்ணிகாஸான்–நீண்டகாதுகளையுடைவன்'
ஆனால் ஸிகாவான் ப்ரதீப: (உயிரினமல்ல); ஹஸ்தவான், 'ஆ' வீற்றுச் சொல்லல்ல)

வா: ப்ராணி அங்காதிதி வக்தவ்யம்
உயிரினங்களின் உறுப்புக்குப் பின் மட்டும் இவ்வொட்டு வரும். ஆகையால் அன்பு, அறிவு ஆகியவைகளுடன் 'லச்' வராது.
'மத்'தான் வரும். சிகீர்ஷாவான்.

**5.2.97** ஸித்[4]மாதி[3]ப்[4]யஸ்[1] ச
'ஸித்[4]ம' முதலியவைகளுக்குப்பின்னும், 'லச்' ஒட்டு, 'மதுப்' பின் பொருளில் விருப்பாக வரும்.
ஸித்[4]மல: அல்லது ஸித்[4]மவான்
குஷ்டரோகி

க³டு³ல: (அ) க³டு³மான் 'கனி'

வா: பார்ஷ்வி த⁴ன்யோர் தீர்க⁴ஸ்' ச
'ல'வுக்குமுன், பார்ஷ்ணி, தமனியின் இறுதி உயிர் நெடிலாகும்.
பார்ஷ்ணீல, த⁴மனீல

வா: வாத தந்த ப³ல லலாடானாமூங்
'வாத' முதலியவைகளுக்குப்பின், 'ஊங்' 'ல' ஒட்டுக்கு முன் வரும்.
வாதூல:, தந்தூல:, ப³லூல:, லலாடூல:

வா: ஜடா க⁴டா கலா: க்ஷேபே
நிந்தனையைச் சுட்டும்போது 'லச்' ஒட்டு ஜடா முதலியவைகளுக்குப்பின் வரும்.
ஜடால:, க⁴டால:, கலால:
ஆனால் ஜடாவான் தாபஸ: (நிந்தனையைச் சுட்டவில்லை)

வா: க்ஷுத்³ர ஜந்து உபதாபயோஸ் ச இஷ்யதே 'லச்' ஒட்டு,
சிறு பிராணிகளைக் குறிக்குஞ் சொற்கள், வியாதிகளைக் குறிக்குஞ் சொற்கள் ஆகியவைகளுக்குப்பின்னும் வரும்.
யூகால:, மக்ஷிகால:
சிசர்சிகால:, மூர்ச²ால:

**5.2.98** வத்ஸா ம்ஸாப்⁴யாம் காமாப³மூல
வத்ஸ 'கன்று', அம்ஸ 'தோள்' ஆகிய சொற்களுக்குப்பின் 'லச்' ஒட்டு முறையே 'அன்பு', 'பலம்' என்ற பொருட்களில் வரும்.
வத்ஸல: 'அன்பான'
அம்ஸல: 'பலம் பொருந்திய'
ஆனால் வத்ஸவதீ கௌ³ள: 'கன்று உடைய பசு'
அம்ஸவான் து³ர்ப³ல: 'பலவீனமான தோள்களையுடையவன்'
இங்கு 'மத்' ஒட்டுத்தான் கட்டாயமாக வரும்.

**5.2.99** பே²னாதி³லச் ச
பேன 'நுரை'வுக்குப்பின் 'இலச்' ஒட்டும் 'மதுப்' பின் பொருளில் வரும்.
பே²னில:, பே²னல: 'நுரையுள்ள'

**5.2.100** லோமாதி பாமாதி பிச்சாதி³ப்⁴ய: ஸனேலச:
'லோம' முதலியவைகள், 'பாம' முதலியவைகள் 'பிச்'ச²' முதலியவைகளுக்குப்பின் முறையே, ஸ, ன, இலச் ஒட்டுக்கள் 'மதுப்'பின் பொருளில் வரும்.
'மதுப்'பும் விருப்பாக வரும்.

லோமஸ:, லோமவான் 'ரோசமுள்ள'
பாமன:, பாமவான் 'சொறிபிடித்துள்ள'
பிச்சி2ல:, பிச்சி2வான் 'சாறுள்ள'

**5.2.101** ப்ரக்3ஞா ஸ்'ரத்3த4ா அர்ச்சா வ்ருத்திப்4யோண:

'மதுப்'பின் பொருளில் ண (அ) ப்ரக்3ஞா, ஸ்ரத்3த4ா, அர்சா, வ்ருத்தி என்ற சொற்களுக்குப்பின் வரும்.
'மதுப்'பும் இவைகளுடன் வரும்.
ப்ராக்3ஞ: அல்லது ப்ரக்ஞாவான் 'அறிவாளி'
ஸ்ராத்3த4: (அ) ஸ்ரத்3த4ாவான் 'நம்பிக்கையுடையவன்' ஆர்ச: (அ ) அர்சாவான் 'கடவுளின் மூர்த்தியையுடையவன்' வார்த்த: (அ) வ்ருத்திமான் 'வாழ வசதியுடையவன்'

**5.2.102** தப: ஸஹஸ்ராப்4யாம் வினீர்

தபஸ், ஸஹஸ்ர என்ற சொற்களுக்குப்பின் முறையே வினி, நினி என்ற ஒட்டுக்கள் 'மதுப்'பின் பொருளில் வரும்.
தபஸ்வின் – இருடி
ஸஹஸ்ரின் – ஆயிரமுடையவன்

**5.2.103** அண் ச

தபஸ், ஸஹஸ்ர,வுடன் அண் ஒட்டும் வரும்.
தாபஸ: 'இருடி', ஸாஹஸ்ர: 'ஆயிரமுடையவன்'

வா: அண் ப்ரகரணே ஜ்யோத்ஸ்னாதி3ப்4ய உபஸம்க்2யானம்
'ஜ்யோத்ஸ்னா' முதலியவைகளுடன் 'அண்' ஒட்டு வரும்.
ஜ்யௌத்ஸ்ன: பக்ஷ:
தாமிஸ்ர: கௌண்டல:

**5.2.104** ஸிகதா ஸர்கராப்4யாம் ச

ஸிகத, ஸர்கரா என்ற சொற்களுக்குப்பின்னும் 'அண்' ஒட்டு 'மதுப்' பின் பொருளில் வரும்.
ஸைகதோ க4ட: 'மணற்பானை'
ஸார்கரம் மது4: 'தேன்'

**5.2.105** தே3ஸே'லுபி3லசௌ ச

ஸிகத, ஸர்கரா ஆகியவைகளுடன் இணைக்கப்பட்ட மதுப்பின் பொருளைச் சுட்டும் ஒட்டு, ஆக்கப்பட்ட சொல், ஒரு இடத்தைக் குறிக்குமானால் கெடும். அல்லது, இச்சொற்களுடன் 'இலச்' ஒட்டும் அண், மதுப் ஒட்டுக்களும் வரும்.
ஸிகதா தேஸ':, ஸிகதில:, ஸைகத: ஸிகதாவான் – 'மணல் நிறைந்த இடம்'
ஸர்கரா தேஸ':, ஸர்கரில:, ஸார்கர: ஸர்கராவான் – 'கல் நிறைந்த இடம்'

**5.2.106** த³ந்த உன்னத உரச்

தந்த 'பல்' என்ற சொல்லுக்குப்பின் உரச் (உர) ஒட்டு, 'நீண்டபல்லைக் கொண்ட' என்ற பொருளில் வரும்.

தந்துர: நீண்ட பல்லுடையவன்'

ஆனால் தந்தாவான் – பல்லுடையவன்

**5.2.107** ஊஷ ஸுஷி முஷ்க மதே⁴ா: ர:

ஊஷ, ஸுஷி, முஷ்க, மது⁴ என்பவைகளுடன் 'மதுப்'பின் பொருளில் 'ர' ஒட்டு வரும்.

ஊஷரம் க்ஷேத்ரம் 'உப்பார்ந்த நிலம்'

ஸுஷிரம் காஷ்டம் 'ஓட்டையுள்ள விறகு'

முஷ்கர: பஸு: விதையுடைய

மது⁴ரோ கு³ட: இனிப்பான

வா: ரப்ரகாலஸே க²முக² குஞ்ஜேப்⁴ய: உபஸம்க்²யானம் க², முக², குஞ்ஜ என்ற சொற்களுக்குப்பின்னும் 'ர' ஒட்டு வரும்.

க²ர: 'கழுதை' அகன்ற தொண்டையுடைய'

முக²ர: வாயாடி

குஞ்ஜர: யானை, தந்தங்களையுடைய

வா: நக³ பாம்ஸு பாண்டுப்சயண்சேதி வக்தவ்யம்

நக, முதலியவைகளுக்குப்பின்னும் 'ர' வரும்.

நகரம், பாண்ஸுரம், பாண்டுரம்

வா: கச்ச²வா ஹ்ரஸ்வத்வம் ச

'கச்கு²'வுடன் இவ்வொட்டு வரும்போது உயிரெழுத்து குறுகும் கச்'சு²ரம்

**5.2.108** த்³யு, த்³ருப்⁴யாம் ம:

'மதுப்'பின் பொருளில் 'ம' ஒட்டு த்³யு, த்³ருவுக்குப்பின் வரும்.

த்³யுன்: 'பளபளப்பான'

த்³குக: 'மரங்'களையுடைய

**5.2.109** கேஸாத்³ வோ அன்யதரஸ்வாம்

'கேஸ'த்துக்குப்பின் 'வ' ஒட்டு 'மதுப்'பின் பொருளில் விருப்பாக வரும்.

கேஸவ:, கேஸரீ, கேஸிக:, கேஸிவான் 'மயிருடைய'

வா: வப்ரகரணே அன்யேப்⁴யோ அபி த்³ருஸ்யத இதி வக்தவ்ய:

மற்ற சொற்களோடும் 'வ' ஒட்டு வரும்.

மணிவ: ஒருவகைப் பாம்பு. ஹிரண்யவ: ஒருவகை ரத்னம். ராஜீவம்

வா: m®z b[ hnyhg°[1] ச

'அர்ணஸ்' என்ற சொல்லின்னிறுதியெழுத்தான 'ஸ' இவ்வொட்டுக்குமுன் கெடும்.

அர்ணவ: 'கடல்'

வா: ச[2]ந்த[3]ஸீ வனிபௌ ச

வேதமொழியில் வனிப், ஒட்டு வரும். ஈ, வ, மதுப் ஆகியவைகளும் வரும்.

ஈ – ரத்[2]ரபன் முத்[3]கலானீ க[3]விஷ்டௌ ஸுமங்கலீரியம் வதூ[4]:

வனிப் – மக[4]வானமீமஹே

வ, மதுப் – உத்[3]வா, உத்[3]வத்

வா: மேத[4]ாரத[2]ாப்[4]யாமி ரன்னிரசௌ வக்தவ்யௌ

மேதசா, ரத என்ற சொற்களுக்குப்பின் முறையே இரன், இரச் ஒட்டுக்கள் 'மதுப்'பின் பொருளில் வரும்.

மேதி[4]ர:, ரதி[2]ர:

**5.2.110** க[3]ாண்ட்யஜக[3]ாத் ஸம்க்ஞாயாம்

க[3]ாண்டி[3], அஜக[3] என்ற சொற்களுக்குப்பின் 'மதுப்' ஒட்டின் பொருளில் வரும், ஆக்கப்பட்ட சொல் ஒரு பெயராகும்.

க[3]ாண்டீவம் – 'அர்சுனனின் வில்லின் பெயர்'

அஜக[3]வம் – சிவனின் வில்லின் பெயர்

**5.2.111** காண்ட[3]ாண்ட[3]ாத் ஈரன் ஈரசௌ

ஈரன் (ஈர), ஈரச் (ஈர) ஒட்டுக்கள், முறையே காண்ட, அண்ட என்ற சொற்களுக்குப்பின் 'மதுப்'பின் பொருளில் வரும்.

காண்டீர: 'கணுக்களையுடைய தண்டு', அண்டீர: முட்டையுடைய'

**5.2.112** ரஜ: க்ருஷ்யாஸுதி பரிஷதோ வலச்

வலச் (வல) ஒட்டு, 'மதுப்'பின் பொருளில் ரஜஸ், க்ருத்ஷி, ஆஸுதி, பரிஷ என்ற சொற்களுக்குப்பின் வரும்.

ரஜஸ்வலா ஸ்த்ரீ – 'மாதவிடாயிலுள்ள பெண்'

க்ரஷீவல: குடும்பீ[3] – 'உழவன்'

ஆஸுதிவல: ஸௌண்டிக: 'சாராயங் காய்ச்சுபவன்'

பரிஷத்வலோ ராஜா: 'சபையினுறுப்பினர்'

வா: வலச் ப்ரகரணே அன்யேப்[4]யோ அபி[3]த்ருஸ்[1]யத இதி வக்தவ்யம்

மற்ற சொற்களோடும் 'வலச்' ஒட்டு வரும். ப்[4]ராத்ருவல:, உத்ஸாஹவல:

**5.2.113** த[3]ந்தஸிக[2]ாத் ஸம்க்[3]ஞாயாம்

த[3]ந்த, ஸிக[2]ா என்ற சொற்களுக்குப்பின் 'வலச்' ஒட்டு 'மதுப்'பின் பொருளில்

வரும். ஆக்கப்பட்ட சொல் ஒரு பெயரைச் சுட்டும்.

த$^{3}$ந்தாவல: 'யானை', ஸிக$^{2}$ாவலம் 'மயில்' 'தந்த' என்ற சொல்லின் இறுதி உயிர் 'அ' 'வல' ஒட்டுக்கு முன் 'ஆ' வாகும் (6.3.118).

**5.2.114** ஜ்யோத்ஸ்னா தமிஸ்ரா ஸ்ருங்கிணோர் ஜஸ்வின்னூர் ஜஸ்வல கோ$^{3}$மின் மலின மலீமஸா:

ஜ்யோத்ஸ்னா, தமிஸ்ரா, ஸ்ருங்கின, ஊர்ஜஸ்வின், ஊர்ஜஸ்வல, கோமின், மலின, மலீமஸ என்ற சொற்கள் 'மதுப்' பொருளில் விதிக்குப்புறம்பாக ஆக்கப்பட்டவை.

ஜ்யோதிஷ் + ன = ஜ்யோத்ஸ்னா, 'நிலா'

தமிங் + ர = தமிஸ்ரா 'இரவு'

ஸ்ருங்க + இனச் = ஸ்ருங்கின: 'கொம்புள்ள'

ஊர்ஜ + அஸுக் = வினி/வலச் + ஊர்ஜஸ்வின், ஊர்ஜஸ்வல, 'பலமுள்ள'

கோ + மினி = கோமின் 'மாடுகளுடைய'

மல + இனச் = மலின: 'அழுக்கான'

மல + ஈமஸச் = மலிமஸ: 'அழுக்கான'

**5.2.115** அத இனிட$^{2}$னௌ

'அ' ஈற்றுச் சொற்களுக்குப்பின், இனி, டன், ஒட்டுக்கள் 'மதுப்'பின் பொருளில் வரும்.

தஸ்டீ$^{3}$, தண்டி$^{3}$க:, தண்டவான், 'தண்டத்தைக் கொண்ட' ச$^{2}$க்ரீ, ச$^{2}$த்ரிக:, ச$^{2}$த்ரவான் – குடையுடைய

**5.2.116** வ்ரீஹ்யாதி$^{3}$ப்$^{4}$யஸ்' ச

'ப்ரீஹி' முதலியவைகளுக்குப்பின்னும் 'மதுப்'பின் பொருளில் மேலே கூறிய ஒட்டுக்கள் வரும்.

வ்ரீஹீ, வ்ரீஹிக:, வ்ரீஹிவான் 'அரிசியுள்ள'

**5.2.117** துந்த$^{3}$ாதி$^{3}$ப்$^{4}$ய: இலச்ச

'இலச்' ஒட்டு 'மதுப்'பின் பொருளில் 'துந்த$^{3}$' முதலிய சொற்களுக்குப்பின் வரும் மற்ற வொட்டுக்களும் வருமென்று 'ச' சுட்டுகிறது.

துந்தி$^{3}$ல: துந்தீ, துந்தி$^{3}$க: துந்த$^{3}$வான் 'துருத்திக் கொண்டிருக்கும் வயிறுடைய'

உத$^{3}$ரில:, உத$^{3}$ரீ, உதரிக:, உதரவான் 'பெருவயிறுடைய'

**5.2.118** ஏக கோ$^{3}$பூர்வாட் ட$^{2}$ஞ் நித்யம்

ஏக, கோ$^{3}$ா ஆகியவைகள் முதலுறுப்பினராகக் கொண்ட பிராதிபதிகத்துக்குப்பின் கட்டாயமாக 'ட$^{2}$ஞ்' ஒட்டு 'மதுப்'பின் பொருளில் வரும்.

ஐகஸதிக: 'ஒரு நூறு உடையவன்'

கௌஸதிக: 'நூறு பசுக்களையுடையவன்'

**5.2.119** ஸத ஸஹஸ்ராந்தாச் சநிஷ்காத்

'நிஷ்க'த்தைத் தொடர்ந்து நிற்கும் ஸத, ஸஹஸ்ர என்ற சொற்களுக்குப்பின் 'மதுப்'பின் பொருளில் 'டஞ்' ஒட்டு வரும்.

நைஷ்கஸதிக:, நைஷ்க ஸஹஸ்ரிக:

**5.2.120** ரூபாத$^{3}$ாஹத ப்ரஸம்ஸயோர் யப்

யப்(ய) ஒட்டு, 'ரூப' என்ற சொல்லுக்குப்பின் 'மதுப்'பின் பொருளில் வரும். அது முத்திரையிடுதல் அல்லது புகழ்தல் என்ற பொருளைச் சுட்டும்.

ரூப்யோ த்$^{3}$னார: 'ஒரு அரசனின் முத்திரையிட்ட தீனார' ரூப்யம் கேதார:

ரூப்ய: புருஷ: 'அழகான மனிதன்'

வா: யப் ப்ரகரணே அன்யேப்$^{4}$யோ அபி த்$^{3}$ருஸ்யத இதி வக்தவ்யம்

ஹிம்யா: பர்வதா: 'பனியுடைய மலை'

குண்யா ப்$^{3}$ராம்மணா

**5.2.121** அஸ் மாயா மேத$^{4}$ா ஸ்ரஜோ வினி

'அண்'ஐ யிறுதியில் கொண்ட சொற்கள், மாயா, மேத$^{4}$ா, ஸ்ரஜ் ஆகியவைகளுக்குப்பின் வினி ஒட்டு, 'மதுப்'பின் பொருளில் வரும்.

யஸஸ்வீ 'புகழ்வாய்ந்த', தபஸ்வீ 'இருடி'

பயஸ்வீ – 'பால் (அ) தண்ணீர் நிறைந்த'

மாயாவீ, வித்தை காட்டி, மேதாவீ, ஸ்ரக்$^{3}$வீ 'மாலையுடையவன்'

மாயாவுடன் 'இனி' 'டன்' உம் வரும். மாயீ, மாயிக.

**5.2.122** ப$^{3}$ஹுலம் ச$^{2}$ந்த$^{3}$ஸி

வேதமொழியில் 'வினி' ஒட்டு, 'மதுப்'பின் பொருளில் பல வகையில் வரும்.

அக்$^{3}$னே தேஜஸ் வின்

ஸூர்ய: வர்சஸ்வான் (இங்கு வினி வரவில்லை)

வா: ச$^{2}$ந்தஸி வினி ப்ரகரணே அஷ்ட்ராமேக$^{2}$லா த்$^{3}$வயோப$^{4}$ய ருஜா ஹ்ருதயானாம் தீத்$^{3}$ர்க$^{4}$த்வம் சேதி வக்தவ்யம்.

வேதமொழியில், அஷ்ட்ரா முதலியவைகளுக்குப்பின் 'வினி' ஒட்டு 'மதுப்'பின் பொருளில் வரும். த்$^{3}$வய, உப$^{4}$ய, அஷ்ட்ராவீ, மேக$^{2}$லாவீ, த்$^{3}$வயாவீ, உப$^{4}$யாவீ, ருஜாவீ, ஹ்ருதயாவீ

வா: மர்மணர்ச இதி வக்தவ்யம் மர்மாவீ

வா: ஸர்வத்ராமயஸ்யோப ஸம்க்$^{2}$யானம் ச$^{2}$ந்தஸி ப$^{4}$ாஷாயாம் ச

வேதமொழியிலும் மற்ற மொழிகளிலும் 'ஆமய' என்ற சொல்லுக்குப்பின் கட்டாயமாக 'வினி' வரும். ஆமயாவீ

வா: ஸ்ருங்க வ்ருந்த$^{3}$ாப்$^{4}$யாமாரகன் வக்தவ்ய:
ஸ்ருங்க, வ்ருந்த என்ற சொற்களுக்குப்பின் ஆரகன், என்றவொட்டு வரும். ஸ்ருங்காரக:, வ்ருந்தாரக:

வா: ப$^{2}$வ ப$^{3}$ர்ஹிப்$^{4}$யாமினஜ் வக்தவ்ய:
'இனச்' ஒட்டு ப$^{2}$ல, ப$^{3}$ர்ஹி என்ற சொற்களுக்குப்பின் வரும்.
ப$^{2}$வின:, ப$^{3}$ர்ஹிண:

வா: ஹ்ருத$^{3}$யாஞ்சாலுரன்ய தரஸ்யாம்
'ஹ்ருதய' என்ற சொல்லுக்குப்பின் 'ஆலு' ஒட்டு வவிருப்பாக வரும்.
ஹ்ருத$^{3}$யாலு, ஹ்ருத$^{3}$யீ, ஹ்ருத$^{3}$யிக: ஹ்ருதயவான்

வா: ஸீதோஷ்ண த்ரு ப்ரேப்$^{4}$யஸ்தன்ன ஸஹத இத்யாலுஜ் வக்தவ்ய:
'ஆலுச்' ஒட்டு, ஸீத, உஷ்ண முதலியவைகளுக்குப்பின் அதைத் தாங்க முடியாது' என்ற பொருளில் வரும்.
ஸீதாலு:, உஷ்ணாலு:, த்ருப்ராலு:

வா: தந்த ஸஹத இதி ஹிமாச்சேலு:
'ஹிம' என்ற சொல்லுக்குப்பின் 'இலு' 'அதைத் தாங்க முடியாது' என்ற பொருளில் வரும்.
ஹிமேலு:

வா: வலாது$^{3}$லச்
'வல' என்ற சொல்லுக்குப்பின் 'ஊலச்' 'அதைத் தாங்க முடியாது' என்ற பொருளில் வரும்.
வலூல:

வா: வாதாத் ஸமூஹே ச வாதம் ந ஸஹத இதி ச
'வாத' என்ற சொல்லுக்குப்பின் 'அதன் கூட்டம்' அதைப் பொறுக்க முடியாது என்ற பொருட்களில் 'ஊலச்' வரும். வாதூல:

வா: பர்வ மருத்$^{3}$ப்$^{4}$யாம் தன் வக்தவ்ய:
'தன்' ஒட்டு பர்வ, மருத் ஆகியவைகளுக்குப்பின் வரும்.
பர்வத:, மருத:

வா: அர்த$^{2}$ாத்தத$^{3}$ ப$^{4}$ாவே இனிர் வக்தவ்ய:
இனி ஒட்டு 'அது இல்லாதவன்' என்ற பொருளில் 'அர்த$^{2}$' என்ற

சொல்லுக்குப்பின் வரும். அர்த்[2] – பிச்சைக்காரன், பொருளில்லாதவன்
ஆனால் அர்த[2]வான் – 'பணக்காரன்'
இவைகளெல்லாம் ப[3]ஹுல என்பதின் மூலம் கிடைக்கப்பெற்றவை.

**5.2.123** ஊர்ணாயா யுஸ்
'ஊர்ணா' என்ற சொல்லுக்குப்பின் 'யுஸ்' ஒட்டு 'மதுப்'பின் பொருளில் வரும்.
ஊர்ணாயு: 'கம்பளியுள்ள'
வேதமொழியில் என்பதையிங்கு அனுவிருத்தியாகக் கொள்கிறார்கள் சிலர்.

**5.2.124** வாசோ க்[3]மினி:
'வாச்' என்ற சொல்லுக்குப்பின் 'மதுப்' பின் பொருளில் 'க்[3]மினி' ஒட்டு வரும்.
வாக்[3]மின் – பேச்சாளர்

**5.2.125** ஆலஜாடசௌ ப[3]ஹுப[4]ாஷிணி
முதல் வேற்றுமையிலமையும் 'வாச்' என்ற சொல்லுக்குப்பின் ஆலச், ஆடச் என்ற வொட்டுக்கள் 'மிகுதியாகப் பேசுபவன்' என்ற பொருளில் வரும்.
வாசால:, வாசாட: 'வாயாடி'

வா: குத்ஸித இதி வக்தவ்யம்
இகழ்ச்சியாகக் குறிப்பிடும்போதுதான் இவ்வொட்டு வரும். மற்றபொருளில் வாக்மீ.

**5.2.126** ஸ்வாமின்னைஸ்'வர்யே
விதிக்குப்புறம்பாக ஆக்கப்பட்ட சொல்லான 'ஸ்வாமின்' பிரபு வென்ற பொருளைச் சுட்டும்.
ஸ்ல ஆமினி ஸ்வாமின் 'சொத்துடையவன்' ஆனால் 'ஸ்வ வான்' (இங்கு யஜமானன் என்ற பொருளைச் சுட்டாது)

**5.2.127** அர்ஸ ஆதி[3]ப்[4]யோ அச்
'அர்ஸ' முதலியவைகளுக்குப்பின் 'அச்' ஒட்டு 'மதுப்'பின் பொருளில் வரும்.
அர்ஸ'ஸ : 'மூலநோயினால் வருந்துபவன்'
உரஸ: பலம் பொருந்திய நெஞ்சுள்ளவன்'

**5.2.128** த்[3]வந்தி[3]வோபதாப க[3]ர்ஹ்யாத் ப்ராணிந்த[2]ாதி[3]னி:
துவந்துவத் தொகை, நோயின் பெயர், நிந்தனைக்குரியவை, ஆகியவற்றிற்குப்பின் 'இனி' ஒட்டு, மறுப்பின் பொருளில், இவைகள் உயிரினங்களில் காணப்படுபவையானால், வரும்.
கடகுவலயின் – 'சங்கு, நூபுரம் நகையணிந்தவள்'
குஷ்டீ, குலாஸீ 'வெள்ளைக்குஷ்டமுள்ளவன்'
ககுத[3]ாவர்த்தீ, காகதாலுக்

ஆனால் புஷ்பபலவான் வ்ருக்ஷ:

வா: ப்ராண்யங்கான்னேஷ்யதே
உயிரினங்களின் உடலுறுப்புகளோடு இவ்வொட்டு வராது.
பாணிபாத வதி

**5.2.129** வாதாதிஸாராப்[4]யாம் குக்ச
'வாத, ஆதிஸார' என்ற சொற்களோடு 'இனி' ஒட்டு வரும்போது, அதற்குமுன் 'குக்' ஆகமமாகும். வாதகீ, 'வாதநோயுள்ளவன்', அதிஸாரகீ 'பேதியால் வருந்துபவன்'

வா: பிஸாசாச் சேதி வக்தவ்யம்
'பிஸாச' என்ற சொல்லுக்குப்பின்னும் 'குக்' ஆகமம் வரும். பிஸாசகீ வைஸ்ரவணீ
இது ஒரு நோயைச் சுட்டும்போதுதான் வரும். ஆகையால் வாதவதீ கு[3]ஹா: இங்கு வராது.

**5.2.130** வயஸி பூரணாத்
'பூரண' ஒட்டையிறுதியாகக் கொண்ட சொற்களுக்குப்பின் 'மதுப்'பின் பொருளில், வயதைக் குறிக்கும்போது 'இனி' ஒட்டு வரும்.
பஞ்சமீ – ஐந்து மாதம் அல்லது ஆண்டு ஆன
ஆனால் பஞ்சமவான் க்[3]ராமராக[3]
இங்கு வயது சுட்டப்படவில்லை.

**5.2.131** ஸுகாதி[3]ப்[4]யஸ் ச
'மதுப்'பின் பொருளில் 'ஸுக' முதலியவைகளுக்குப்பின் 'இனி' ஒட்டு வரும்.
ஸுகீ, து: கீ[2]

**5.2.132** த[4]ர்ம ஸீல வர்ணாந்தாச் ச
'தர்ம' முதலியவைகளை யிறுதியில் கொண்ட பிராதிபதிகங்களுக்குப்பின் 'இனி' ஒட்டு 'மதுப்' பின் பொருளில் வரும்.
ப்[3]ராஹ்மண த[4]ர்மீ, ப்[3]ராஹ்மணஸீலீ,
ப்[3]ராஹ்மண வர்ணீ

**5.2.133** ஹஸ்தாஜ் ஜாதௌ
'ஹஸ்த' என்ற சொல்லுக்குப்பின், 'மதுப்'பின் பொருளில் 'இனி' ஒட்டு வரும்.
ஆக்கப்பட்ட சொல் ஒரு இனத்தைச் சுட்டும்.
ஹஸ்தீ 'யானை'
ஆனால் யஸ்தவான் புருஷ:

**5.2.134** வர்ணாத்3 ப்3ரஹ்மசாரிணீ

'வர்ண' என்ற சொல்லுக்குப்பின் 'மதுப்'பின் பொருளில் 'இனி' ஒட்டு வரும். ஆக்கப்பட்ட சொல், பிரம்மசாரி என்ற பொருளைச் சுட்டும்.

வர்ணீ

ஆனால் வர்ணவான். இது 'பிம்மசாரி'யைக் குறிக்கவில்லை பிரம்மசாரி. நான்கு ஆசிரமங்களில் முதலாவது. இது முதல் மூன்று ஜாதிக்குரியது.

**5.2.135** புஷ்கராதி3ப்4யோ தே3ஸே

'புஷ்கர' முதலியவைகளுக்குப்பின் 'இனி' ஒட்டு 'மதுப்'பின் பொருளில் வரும். ஆக்கப்பட்ட சொல் ஒரு இடத்தைக் குறிக்கும்.

புஷ்கரிணீ – 'குளம்'

வா: இனி ப3லாத் ப3ாஹூரு பூர்வாதுப ஸம்க்2யானம்

பாஹூ, ஊருவைத் தொடர்ந்து வரும் 'ப3ல' என்ற சொல்லுக்குப்பின் 'இனி' வரும்.

ப3ாஹு ப3லின், ஊருப3லின்

வா: ஸர்வாதே3ஸ் ச இதி வக்தவ்யம்

'ஸர்வ' என்ற சொல் முதலில் நிற்கும் பிராதிபதிகத்துக்குப் பின்னும் 'இனி' வரும் ஸர்வத4வீ, ஸர்வகேஸீ

வா: அர்த2ாச்சாஸன்னிஹிதே

'அர்த2' என்ற சொல்லுக்குப்பின். 'இனி' 'அருகிலில்லை' என்ற பொருளில் வரும்.

அர்தி2ன் – 'செல்வத்துக்கப்பாற்பட்ட' ஆனால் அர்த2வான் 'செல்வமுடையவன்'

வா: தத3ந்தாச்சேதி வக்தவ்யம்

'அர்த2' என்ற சொல்லிறுதியில் நிற்கும் பிராதிபதிகத்துக்குப்பின்னும் இவ்வொட்டு வரும்.

ஹிரண்யார்தீ, த4ான்யார்தீ

**5.2.136** ப3லாதி3ப்4யோ மதுப3ன்ய தரஸ்யாம்

'ப3ல' முதலியவைகளுக்குப்பின் 'மதுப்' விருப்பாக வரும். ஆகவே 'இனி'யும் வரும் ப3லவான், ப3லீ

**5.2.137** ஸம்க்3ஞாயாம் மன்மாப்4யாம்

'மன்' அல்லது 'ம' வீற்றுச் சொற்களுக்குப்பின் 'இனி' ஒட்டு 'மதுப்'பின் பொருளில் வரும். தருவிக்கப்பட்ட சொல் ஒரு பெயராகும்.

ப்ரதி3மினீ, 'பூமி அகலமான' த3ாமினீ

ஹோமினீ 'யாகம் பண்ணுபவன்' ஸோமினீ

**5.2.138** கம்ஸம்ப்⁴யாம் ப³ப⁴யுஸ்திது தயஸ:

கம் 'தண்ணீர், மகிழ்ச்சி' ஸம் மகிழ்ச்சி என்ற 'ம' வீற்றுச் சொல்லுக்குப்பின் 'மதுப்'பின் பொருளில், ப³, ப⁴ முதலிய வொட்டுக்கள் வரும்.

கம்ப³: 'மேகம்' , ஸம்ப³: 'மகிழ்ச்சியுள்ள', ஸம்ப⁴: கம்யு:, ஸம்யு:, கந்தி:, ஸந்தி:, கந்து:, ந்து:, கந்த:, ஸந்த:, கம்ய, ஸம்ய:

**5.2.139** துந்தி³வலி வடேர் ப⁴:

துந்தி³, வலி, வடி ஆகியவற்றிற்குப்பின், ப⁴' ஒட்டு 'மதுப்'பின் பொருளில் வரும்.

துந்தி³ப⁴:, வலிப⁴:, வடிப⁴:

**5.2.140** அஹம்ஸுப⁴மோர்யுஸ்

அஹம் 'நான்', ஸுப⁴ம் என்ற சொற்களுக்குப்பின் 'யுஸ்' ஒட்டு மதுப்பின் பொருளில் வரும்.

அஹம்யு: 'ஆணவமுடையவன்'

ஸுப⁴ம்யு: 'மங்களமான'

**5.3.1** ப்ராக்³தி³ஸோ'ா விப⁴க்தி:

இச்சூத்திரத்திலிருந்து திக்ஸ்ப்தே³ப்⁴ய (5.3.27) என்ற சூத்திரத்துக்கு முந்திய சூத்திரம் வரை விளக்கப்படும் ஒட்டுக்கள், விபக்தி என்ற பெயர் பெறும். சூ.5.3.1 – 26 வரை கூறப்பட்டிருக்கும் ஒட்டுக்கள் சொற்களின் பொருட்களை மாற்றாது. இவைகள் 'ஸ்வார்த' ஒட்டுக்கள் எனப்படும். இவ்வொட்டுக்கள் ஸ்வார்திகமாக ஆவதால், ஸமர்த²னாம், ப்ரத²மாத் (4.1.82) ஆகியவைகள் இச்சூத்திரங்களில், அனுவிருத்தியாக வராது. ஆயினும் 'வா' என்ற சொல் (4.1.82) அனுவிருத்தியாகும்.

இவ்வொட்டுக்கள் விபத்தியென்ற ஸம்க்²ஞாவினால் குறிப்பிடுவதன் நோக்கம் (1) இறுதி ஸ், ம், என்ற எழுத்துக்களை, 'இத்'தாகக் கருதப்படாததால் அவைகள் கெடா (பார்க்க 5.3.18) (2) 'இதம்' என்ற சொல்லின் சுரத்தை ஒழுங்குபடுத்துகிறது. (3) 7.2.102, அதைத் தொடர்ந்து வரும் சூத்திரங்கள், 'தயதா்தி' வகுப்பைச் சேர்ந்த சொற்களுக்குப் பயன்படுத்தக் கூடிய வகையில் அமைதல் ஆகிய வகையாகும்.

**5.3.2** கிம் ஸர்வநாம ப³ஹுப்⁴யோ அத்³வயாதி³ப்⁴ய:

கிம், 'ஸர்வநாம' எனப்படும் சொற்கள், பஹு ஆகியவைகளுக்குப்பின் 'ப்ராக்³தி³ஸ' ஒட்டுக்கள் வரும். ஆனால் 'த்³வி' முதலியவைகளுக்குப்பின் (இவைகளும் ஸர்வநாமம் எனப்படும்) இவ்வொட்டு வராது. கிம், குத: 'எங்கிருந்து, குத்ர' 'எங்கே' தத:, அங்கிருந்து, தத்ர 'அங்கே' (ஸர்வநாம): பஹுத:, பஹுத்ர ஆனால் த்³வாப்⁴ யாம், த்³வயோ:

வா: ப³ஹுக்³ரஹணே ஸங்க்²யாக்ரஹணம்

இங்கு ப³ஹு எண்ணைச் சுட்டும் (ஸங்க்²யா) ஆகையால் ப³ஹோ: ஸூபாத் 'மிகுதியான சாறு' என்பதில், ஸ்வார்தி²க ஒட்டு வராது.

**5.3.3** இத³ம இஸ்

'ப்ராக்³தி³ஸ' ஒட்டுக்கள் தொடரும்போது 'இத³ம்' என்ற சொல்லுக்கு 'இஸ்' ஆதேசமாகும். 'இஸ்'ஸின் ஈறாக 'ஸ்' ஒரு 'இத்'தாகும். ஆகவே இதம் + ஹ (5.3.11) இஹ 'இங்கு'

**5.3.4** ஏததௌ ரதே²ா:

ர, த² என்ற எழுத்துக்களை முதலாகக் கொண்ட 'ப்ராக்திஸீய' ஒட்டுக்கள் தொடரும்போது, முறையே ஏத, இத என்பவைகள் 'இதம்' என்ற சொல்லுக்கு ஆதேசங்களாகும்.

இதம் + ர்ஹில் = ஏதர்ஹி (5.3.16)

இதம் + த²மு = இத்த²ம் (5.3.24)

**5.3.5** ஏததோ³ா அஸ்¹

ப்ராக்திஸீய வொட்டுக்கள் தொடரும்போது, ஏதத்³ என்ற சொல்லுக்கு 'அஸ்' ஆதேசமாகும். ஏதத்³ + தஸில் = அத: (5.3.7), அத்ர (5.3.10) ஸகாரம் முழுச் சொல்லுக்கும் ஆதேசமாகும் என்று சுட்டும்.

**5.3.6** ஸர்வஸ்ய ஸோ அன்யதரஸ்யாம் தி³

'த³' காரத்தை முதலில் கொண்ட ப்ராக்தி'ஸீய வொட்டுக்கள் தொடரும்போது 'ஸர்வ' என்ற சொல்லுக்கு 'ஸ' விருப்பாக ஆதேசமாகும்.

ஸர்வத³ா அல்லது ஸத³ா

ஆனால் ஸர்வம் த³தா³த்தி ஸர்வத³ா ப்³ராஹ்மணீ முழுவதையும் கொடுக்கும் பிராம்மணி. இங்கு 'த³' ப்ராக்திஸீய ஒட்டு அல்ல, ஆகையால் ஆதேசம் கிடையாது.

**5.3.7** பஞ்சம்யா: தஸில்

கிம், ஸர்வநாமன் எனப்படும் சொற்கள், ப³ஹு ஆகியவைகள் 5ஆம் வேற்றுமையைச் சுட்டும்போது, 'தஸில்' ஒட்டு அவைகளோடு இணைக்கப்படும்.

கிம் + தஸில் = கு + தஸ் (7.2.104) குத:, யத:, ப³ஹுத:

**5.3.8** தஸே ஸ்¹ ச

'தஸ்', (5.4.44.45) உக்குப் பதிலியாக 'தஸில்' (கிம், ஸர்வநாம, ப³ஹுவுக்குப்பின்) வரும்.

குத:, யத: சுரத்துக்காகவும், விப⁴க்தியென்ற ஸம்க்ஞா கொடுப்பதற்காகவும் இந்த ஆதேசம்.

**5.3.9** பர்யபி⁴ப்⁴யாம் ச

பரி, அபி⁴ ஆகியவைகளுக்குப்பின்னும் மேலே கூறிய சூழலில் 'தஸில்' ஒட்டு வரும்.

பரித: – 'சுற்றிலும்', அபி⁴த: 'இருபக்கத்திலும்'.

**5.3.10** ஸப்தம்யாஸ் த்ரல்

7ஆம் வேற்றுமையை சுட்டும்போதும் (கிம், ஸர்வநாம, ப³ஹு ஆகியவைகளுக்குப்பின்) 'த்ரல்' ஒட்டு வரும். குத்ர, 'எங்கே? யத்ர 'எங்கே' தத்ர, 'இங்கு' ப³ஹுத்ர – 'பல இடங்களில்'

**5.3.11** இதமோ ஹ:

'இதம்' உக்குப்பின் மேலே குறிப்பிட்ட சூழலில் 'ஹ' வரும்.

இங்கு 'த்ரல்' வராது. ஆகவே, இஹ 'இங்கு' என்ற சொல் கிடைக்கும்.

**5.3.12** கிமோ அத்

மேலே கூறப்பட்ட சூழலில் 'கிம்' முக்குப்பின் அத் (அ) வரும். இங்கும் 'த்ரல்' வருவதற்குத்தடை. கிம் + அத் = க்வ + அ (7.2.105) க்வ 'எங்கே' க்வ அத்⁴யேஷ்யஸே 'எங்கு படிக்கிறாய்' தொடர்ந்து வரும் சூத்திரத்தில் காணப்படும் 'வா' வின் மூலம், இங்கு த்ரல்' உம் விருப்பாக வரும்.

**5.3.13** வா ஹ சச்ச²ந்த³ஸி

வேதமொழியில் மேலே குறிப்பிட்ட சூழலில், 'ஹ'வும் விருப்பாக வரும். மற்றவொட்டுக்களும் வரும். குஹ (7.2.104), க்வ, குத்ர குஹஸ்த²:. குஹஜக்³மது: குஹ ஸ்'யேனேவ பேதது² (ருக்வேதம் 8.62.4) (நீங்களிருவரும்) எங்கிருக்கிறீர்கள்? எங்கு போகிறீர்கள்? கழுகைப்

போன்று எங்கு விழுகிறீர்கள்:

**5.3.14** இதராப்⁴யோ அபி த்³ரு'ஸ்யந்தே

ஏழு, ஐந்தாம் வேற்றுமையைச் சுட்டும்போது மட்டுமல்லாமல், ஏனைய வேற்றுமைச் சொற்களோடும், இவ்வொட்டுக்கள் காணப்படுகின்றன. ப⁴வான், 'தாங்கள் (மதிப்புக்குரிய)', தீ³ர்க³ாயு: 'நீண்டாயுளைக் கொண்டவன்', ஆயுஷ்மான், 'நீண்டாயுள் கொண்டவன், தேவானாம்ப்ரிய 'கடவுளின் அன்புக்குரியவன்' ஆகிய சொற்களோடும் இவைகள் வரும்.

முதல் வேற்றுமை

1. ஸப⁴வான் = ததோ ப⁴வான், தத்ர ப⁴வான்
2. தம் ப⁴வந்தம் = தத்ர ப⁴வந்தம், ததோ ப⁴வந்தம்
3. தேனப⁴வதா = தத்ர ப⁴வதா, ததோ ப⁴வதா
4. தஸ்மை ப⁴வதே = தத்ர ப⁴வதே, ததோ ப⁴வதா
5. தஸ்மாத்³ ப⁴வத: = ததோ ப⁴வத:, தத்ர ப⁴வத:
6. தஸ்ய ப⁴வத: = ததோ ப⁴வத:, தத்ர ப⁴வத:

7. தஸ்மின் ப$^{4}$வதி = ததோ ப$^{4}$வதி, தத்ர ப$^{4}$வதி.
இவ்வாறே, த்$^{3}$ர்க$^{4}$ாயு:, ஆயுஷ்மான் ஆகியவைகளோடும் அமையும்.

**5.3.15** ஸர்வ ஏகான்யகிம்யத்தத$^{3}$ காலே தா
ஸர்வ 'எல்லாம்', ஏக 'ஒன்று', அன்ய 'மற்றது', கிம் 'என்ன, யத் 'எது', தத் 'அது' ஆகியவைகளுக்குப்பின், காலத்தைக் குறிக்க, 'த$^{3}$ா' ஒட்டு வரும். இச்சொற்கள் ஏழாம் வேற்றுமையில் அமையும். ஸர்வத$^{3}$ா, ஸத$^{3}$ா (5.3.6) 'எப்போதும்' ஏகத$^{3}$ா 'ஒரு காலத்தில்', அன்யத$^{3}$ா 'மற்ற நேரத்தில்' கத$^{3}$ா (7.2.103) 'எப்போது?', யத$^{3}$ா 'எப்போது' தத$^{3}$ா அப்போது' ஆனால் ஸர்வத்ர தே$^{3}$ஸே', இத்தொடரிலும், ஏழாம் வேற்றுமையைச் சுட்டும் 'த்ர' காணப்பட்டாலும், இது காலத்தைக் குறிப்பிடாததால், இவ்வொட்டு வராது. இதன் பொருள் 'எல்லா இடங்களிலும்'

**5.3.16** இத$^{3}$மோ ர்ஹில்
காலத்தைக் குறிக்கும்போது 'இத$^{3}$ம்' என்ற சொல்லுக்குப்பின், (7ஆம் வேற்றுமை) ர்ஹில் (ர்ஹி) ஒட்டு வரும்.
ஏதர்ஹி. 'இந்த நேரத்தில்' ஆனால் இஹ 'இவ்விடத்தில்'

**5.3.17** அது$^{4}$னா
மேலே குறிப்பிட்ட பொருளைக் கொடுக்கும் அது$^{4}$னா என்ற சொல் நிபாதனமாகும்.
அது$^{4}$னா – இந்நேரத்தில்/காலத்தில் 'இப்போது'

**5.3.18** த$^{3}$ானீம் ச
'த$^{3}$ானீம்' என்ற ஒட்டும் மேலே கூறிய பொருளைச் சுட்ட, 'இதம்' என்ற சொல்லுக்குப்பின் வரும்.
இதானீம் – 'இப்போது, இந்நேரத்தில்'

**5.3.19** ததே$^{3}$ாத$^{3}$ா ச
7ஆம் வேற்றுமையிலமையும் 'தத்$^{3}$' என்ற சொல்லுக்குப்பின், காலத்தைக் குறிக்க 'த$^{3}$ா' வரும். 'த$^{3}$ானீம்' உம் வரும்.
தத$^{3}$ா அல்லது தத$^{3}$ானீம் 'அப்போது' 'அக்காலத்தில்'

**5.3.20** தயோர் த$^{3}$ார்ஹிலௌ ச ச$^{2}$ந்த$^{3}$ஸி
இவ்விரண்டு சொற்களுக்குப்பின்னும், (இத$^{3}$ம், தத்$^{3}$) முறையே த$^{3}$ா, ர்ஹில் என்ற வொட்டுக்கள் வேத மொழியில் வரும். மற்ற ஒட்டுக்களும் வரும்.
இத$^{3}$ா, (5.3.3), தர்ஹி (7.2.102) இத$^{3}$ானீம், தத$^{3}$ானீம்

**5.3.21** அனத்$^{3}$வதனே ர்ஹில் அன்யதரஸ்யாம்
(கிம், ஸர்வநாமன், ப$^{3}$ஹு ஆகியவற்றிற்குப் பின்) இன்றைக்கல்லாத மற்ற

காலத்தைச் சுட்ட, ர்ஹில் ஒட்டு, விருப்பாக வரும்.
கர்ஹி, கத$^{3}$ா (7.2.103), யர்ஹி, யத$^{3}$ா தர்ஹி, தத$^{3}$ா.

**5.3.22** ஸத்$^{3}$ய: பருத் பரார்யைஷம: – பரேத்$^{3}$யவ்யத்$^{3}$ய பர்வேத்$^{3}$ யுரன்யேத்$^{3}$யு: அன்யதரேத்$^{3}$யுரிதரேத்$^{3}$யுரபரேத்$^{3}$யுரத$^{4}$ – ரேத்யுருப$^{4}$யேத்$^{3}$யுருத்தரேத்$^{3}$யு:
ஸத்$^{3}$ய, பருத் முதலியவைகள் நிபாதனங்கள்.
ஸமானே அஹனி – ஸத்$^{3}$ய; : (ஸமான் → ஸ த்யஸ்) 'அதே நாள்'
பூர்வதரே ஸம்வத்ஸரே : பருத் (பூர்வ : பர + உத்) 'கடந்த ஆண் டு'
பூர்வதரே ஸம்வத்ஸரே : பராரி (பூர்வதர → பர + ஆரி) 'கடந்த ஆண்டுக்கு முந்தின ஆண்டு'
அஸ்மின் ஸம்வத்ஸரே : ஐஷம: (இதம் → இஸ + ஸமதண் (ஆண்டு) 'நடக்கும் ஆண்டில்'
பரஸ்மின்னஹனி : பரேத்$^{3}$யவி (பர + ஏத்$^{3}$யவி (நாள்) 'நாளைக்கு'
அஸ்மின்னஹனி : அத்$^{3}$ய (இத$^{3}$ம்) + த்$^{3}$யஸ் (ஒரு நாள்) 'இன்று'
பூர்வன்மின்னஹனி : பூர்வேத்$^{3}$யுஸ் (பூர்வ + ஏத்$^{3}$யு:) 'நேற்று முன் தினம்'
அன்யஸ்மின்னஹனி : அன்யேத்$^{3}$யுஸ் (அன்ய + ஏத்$^{3}$யுஸ்) 'நாளை மறு நாள்'
அன்யதரஸ்மின்னஹனி : அன்யதரேத்$^{3}$யு : (அன்யதர + ஏத்$^{3}$யு) 'இரண்டு நாட்களில் ஒரு நாள்'
இதரஸ்மின்னஹனி : இதரேத்$^{3}$யு: (இதர + ஏத்$^{3}$யு:) 'வேறு ஒரு நாள்'
அபரஸ்மின்னஹனி : அபரேத்யு: (அபர + ஏத்$^{3}$யு:) 'அடுத்த நாள்'
அத$^{4}$ரஸ்மின்னஹனி : அத$^{4}$ரேத்$^{3}$யு: (அத$^{4}$ர + ஏத்$^{3}$யு:) 'நேற்று முந்தைய நாள்'
உப$^{4}$யோரஹ்னோ: : உபசயேத்யு: (உப$^{4}$ய + ஏத்$^{3}$யு:) 'இரண்டு நாட்களிலும்'
உத்தரஸ்மின்னஹனி (:உத்தர + ஏத்$^{3}$யு:)
உத்தரேத்$^{3}$யு: ( : உத்தர + ஏத்$^{3}$யு:) 'தொடர்ந்து வரும் நாட்களில் ஒரு நாள்'

**5.3.23** ப்ரகாரவசனே த$^{2}$ால்
'கிம்' முதலியவைகளுக்குப்பின் (5.3.2) 'வகை' என்ற பொருளைச் சுடும்போது த$^{2}$ா (த$^{2}$ால்) ஒட்டு இணைக்கப்படும். தத$^{2}$ா 'அவ்வித மாக', 'அவ்வகையாக' யத$^{2}$ா. ஸர்வத$^{2}$ா 'எவ்வகையிலும்'.

**5.3.24** இத$^{3}$மஸ் த$^{2}$மு:
மேற்கூறிய பொருளில் 'த$^{2}$ம்' என்ற ஒட்டு 'இத$^{3}$ம்' என்ற சொல்லுக்குப்பின் வரும்.
இத்த$^{2}$ம் 'இந்த விதமாக'

**5.3.25** கிமஸ் ச
'கிம்' என்ற சொல்லுக்குப்பின்னும் 'த$^{3}$மு' ஒட்டு மேற்கூறிய பொருளில் வரும்.
கத$^{2}$ம் – 'எப்படி, எவ்வகையில்?'

**5.3.26** த2ா ஹேதௌ ச ச2ந்த3ஸி

'த2ா' ஒட்டு, 'காரணம்' என்ற பொருளைக் குறிக்க, வேதமொழியில் 'கிம்' என்ற சொல்லுக்குப்பின் வரும். மேலே கூறிய பொருளில் இவ்வொட்டு, 'கிம்' என்ற சொல்லுக்குப்பின் வரும்.

கத2ா – ஏன்?, எதனால்?

கத2ா – 'எப்படி, எவ்வகையில்'

கத2ா ந ப்ருச்'ச2ஸி 'ஏன் கேட்கவில்லை'

கத2ா தே3வா ஆஸன் 'எவ்வுருவத்தில் அல்லது எவ்வாறு கடவுளிருந்தார்கள்'

**5.3.27** தி3க்ச2ப்தே3ப்4ய: ஸப்தமி பஞ்சமீ ப்ரத2மாப்4ய தி3க்3தே3ஸ'காலேஷ்வஸ்தாதி: 7,5,1ஆம் வேற்றுமையில் முடியும் திசையைக் குறிக்குஞ் சொற்களுக்குப்பின், அவைகள் 'திசை, இடம், காலம்' ஆகியவைகளைக் குறிக்கும்போது 'அஸ்தாத்' என்ற ஒட்டு. அவைகளின் பொருட்களை மாற்றாமல், வரும். புரஸ்தாத்3 வஸதி 'அவன் கீழ்த்திசையில் வசிக்கிறான்'

புரஸ்தாத3ாக3த:– 'அவன் கிழக்கிலிருந்து வந்தான்'

புரஸ்தாத்3ரமணீயம் 'முன்பு இது அழகாக இருந்தது'

மாற்று எடுத்துக்காட்டுகள்

ஐந்த்3ர்யாம் தி3ஸி' வஸதி (திசையைக் குறிக்கும் சொல் இங்கு இல்லை)

பூர்வம் க்3ராமம் க3த: (7,5,1, வேற்றுமைச் சொல் இல்லை) 'முன்பு கிராமத்துக்குச் சென்றான்' பூர்வஸ்மின் கு3ரௌ வஸதி.

**5.3.28** த3க்ஷிணோத்தராப்4யாம் அதஸுச்

(7, 5, 1)ஆம் வேற்றுமையிலமையும் திசை, இடம், காலம் இவைகளைக் குறிக்கும்) தக்ஷிண, உத்தர என்ற சொற்களுக்குப்பின் 'அதஸுச்' என்ற ஒட்டு வரும்.

த3க்ஷிணதோ வஸதி

த3க்ஷிணத ஆக3த:

த3க்ஷிணதோ ரமணீயம்

உத்தரதோ வஸதி

உத்தரத ஆக2த:

உத்தரதோ ரமணியம்

**5.3.29** விப4ாஷா பராவராப்4யாம்

பர, அவர என்ற சொற்களுக்குப் பின் 'அதஸுச்' ஒட்டு, மேற்கூறிய சூழலில், அதே பொருளில், விருப்பாக இணைக்கப்படும்.

பரத: அல்லது பரஸ்தாத் 'வஸதி (அ) ஆக3த:, (அ) ரமணீம்

அவர: அல்லது அவரதோ

**5.3.30** அஞ்சேர் லுக்

திசையைக் குறிக்கும் 'அஞ்ச்'ஐ யிறுதியாகக் கொண்ட சொற்களுக்குப்பின் நிற்கும் 'அஸ்தாதி' ஒட்டு கெடும். ப்ராக், ப்ராக்3 வஸதி (=ப்ராச்யாம் தி3ஸி' வஸதி) ப்ராக3ாக3த, ப்ராக் ரமணீயம் 'ப்ராசீ'யின் பெண்பால் ஒட்டும் 'தத்தித' ஒட்டு கெடும் போது கெடும். (1.2.49)

**5.3.31** உபரி உபரிஷ்ட2ாத்

உபரி, உபரிஷ்ட2ாத் என்ற சொற்கள். 'அஸ்தாதி' ஒட்டின் பொருளில். நிபாதனங்களாகும்.

ஊர்த்4வ + ரில்/ரிஸ்தாதில் = உபரி (அ) உபரிஸ்தாத் உபரி வஸதி 'மேலே வசிக்கிறான்'

உபர்யாக3த: – மேலேயிருந்து வந்திருக்கிறான் உபரி ரமணீயம்

உபரிஷ்ட2ாத்3 வஸதி, உபரிஷ்ட2ாத3ாக3த:,

உபரிஷ்ட2ாத்3 ரமணீயம்

**5.3.32** பஸ்'சாத்

'பஸ்'சாத்' என்ற சொல், (அஸ்தாதி என்ற பொருளில்) நிபாதனமாகும்.

அபர → பஸ்'ச + ஆதி = பஸ்சாதி

பஸ்ச'சாத்3 வஸதி (அபரஸ்யாம் தி3ஸி' வஸதி)

பஸ்'சாத3ாக3த:– பின்னால் வந்தான்

பஸ்'சாத்3 ரமணீயம்

வா: தி3க் பூர்வபத3 ஸ்யாபரஸ்ய பஸ்'சப4ாவோ வக்தவ்ய:

திசையைக் குறிக்குஞ் சொல்லுக்குப்பின் நிற்கும் 'அபர' என்ற சொல்லும் 'பஸ்'ச' என்று மாறும். அதன் பின் 'ஆதி' இணைக்கப்படும்.

உத்தரபஸ்'சாத்

த3க்ஷிணபஸ்'சாத்

வா: அர்தே4ாத்தரபத3ஸ்ய தி3க் பூர்வபத3ஸ்ய பஸ்'ச ப4ாவோ வக்தவ்ய

மேற்கூறிய தொகைக்குப்பின் 'அர்த4' என்ற சொல் தொடர்ந்து வரும்போதும் 'அபர' என்ற சொல், பஸ்'ச' என்று மாற்றமடையும்.

த3க்ஷிண பஸ்'சார்த4:

உத்தர பஸ்'சார்த4:

வா: வினாபி பூர்வ பதே3ன பஸ்'ச பாவோ வக்தவ்ய: 'அபர' என்ற சொல்லுக்கு முன் மற்றொரு சொல் நிற்காமலிருந்தாலும், பஸ்'ச என்று மாறும்.

பஸ்'சார்த4:

**5.3.33** பஸ்'ச பஸ்'சா ச ச2ந்த3ஸி

வேதமொழியில் (காணப்படும்) பஸ்'ச, பஸ்'சா. என்ற சொற்கள்

('அஸ்தாதி'யின் பொருளில்) நிபாதனங்களாகும்.
புரா வ்யாக்$^4$ரே ஜாயதே, பஸ்'ச, (அல்லது) பஸ்'சா, (அ) பஸ்'சாத்$^3$ ஸிம்ஹ:
'புலி முன்னால் போகிறது. (அதன்) பின்னால் சிங்கம் (செல்கிறது)

**5.3.35** ஏனப்$^3$ அன்யதரஸ்யாம் அதூ$^3$ரே அபஞ்சம்யா:
வெகு தூரத்தைச் சுட்டாத எல்லையைக் குறிக்குஞ் சொல்லாகவும், 5ஆம் வேற்றுமையின் பதிலியபல்லாததாகவும் ஆன, ('அஸ்தாதி'யின் பொருளைச் சுட்டும் உத்தர, அத$^4$ர, த$^3$க்ஷிண) என்ற சொற்களுக்குப்பின், ஏனப் (ஏன) ஒட்டு விருப்பாக வரும்.
உத்தரேண (அ) உத்தராத் (அ) உத்தரதோ வஸதி, (அ) ரமணீயம் த$^3$க்ஷிணேன, த$^3$க்ஷிணாத், த$^3$க்ஷிணதோ, அத$^4$ரேண, அத$^4$ஸ்தாத், அத$^4$ராத் ஆனால், 'வெகுதூரம்' என்ற பொருளைச் சுட்டும்போது உத்தராதி$^3$ வஸதி 'அவன் வடக்கே வெகுதூரத்தில் வசிக்கிறான்' உத்தராத்$^3$ஆத$^3$க$^3$த: 'அவன் வடக்கேயிருந்து வந்திருக்கிறான்' (5ஆம் வேற்றுமைப் பொருளில்) 5.3.39 வரையில் 'அபஞ்சம்யா:' தொடரும்.

**5.3.36** த$^3$க்ஷிணாத்$^3$ ஆச்
'த$^3$க்ஷிண' என்ற சொல்லுக்குப்பின் ('அஸ்தாதி'யின் பொருளில்) ஆச் (ஆ) ஒட்டு வரும் (5ஆம் வேற்றுமையுருபின் பதிலியாக அல்ல)
த$^3$க்ஷிணா வஸதி (அ) ரமணீயம் (அ) ஆக$^3$த:

**5.3.37** ஆஹி ச தூ$^3$ரே
'வெகு தூரம்' என்ற பொருளில், 'ஆஹி' என்ற ஒட்டும், 'த$^3$க்ஷிண' என்ற சொல்லுக்குப்பின் 'அஸ்தாதி'யின் பொருளில் வரும். அதாவது 'ஆச்' ஒட்டு டன், ஆஹி என்ற ஒட்டும் 'தக்ஷிண'வுக்குப்பின் வரும். த$^3$க்ஷிணாஹி வஸதி
த$^3$க்ஷிணா வஸதி
அவன் தெற்கே வெகுதூரத்தில் வசிக்கிறான்

**5.3.38** உத்தராச் ச
'உத்தர வடக்கு' என்ற சொல்லுக்குப் பின்னும் மேற்கூறிய வொட்டுக்கள், மேற்குறிப்பிட்ட பொருளைச் சுட்டுமாறு வரும். உத்தராஹி வஸதி
உத்தரா வஸதி

**5.3.39** பூர்வாத$^4$ரா வராணாமஸி புரத$^4$வ ரஸ்'சைஷாம்
பூர்வ, அத$^4$ர, அவர ஆகியவைகளோடு 'அஸ்தாதி'யின் பொருளில் 'அஸி' ஒட்டு வரும். இவ்வொட்டு இணைக்கும் போது இச்சொற்களுக்கு முறையே புர், அத்$^4$, அவ் ஆகியவைகள் ஆதேசமாகும்.
புரோ வஸதி
அதே$^4$ா வஸதி
அவோ வஸதி

**5.3.40** அஸ்தாதி ச

மேற்கூறிய சொற்களுக்குப்பின் 'அஸ்தாதி' ஒட்டு வரும் போதும் மேலே குறிப்பிட்டவை அவைகளுக்குப் பதிலியாகும்.

புரஸ்தாத்$^{3}$ வஸதி

அத$^{4}$ஸ்தாத்$^{3}$ வஸதி

**5.3.41** விப$^{4}$ாஷா அவரஸ்ய

'அவர' என்ற சொல்லைத் தொடர்ந்து 'அஸ்தாதி' ஒட்டு நிற்கும்போது 'அவ்' ஆதேசம் விருப்பாக வரும்.

அவஸ்தாத்$^{3}$ வஸதி அல்லது அவரஸ்தாத்$^{3}$ வஸதி

அவஸ்தாத$^{3}$ாக$^{3}$த: அல்லது அவரஸ்மதாத$^{3}$ாக$^{3}$த:

**5.3.42** ஸங்க்$^{4}$யாயா வித$^{4}$ார்தே$^{2}$ த$^{4}$ா

எண்ணுப் பெயர்களுக்குப்பின் த$^{4}$ா ஒட்டு செயல் செய்யப்படும் விதத்தைச் சுட்டும்போது வரும்.

ஏகத$^{4}$ாபு$^{4}$ங்க்தே – அவன் ஒரு முறை உண்கிறான்.

த்$^{3}$வித$^{4}$ா க$^{3}$ச்சதி 'இருமுறை செல்கிறான்'

**5.3.43** அதி$^{4}$கரண விசாலே ச

ஒரு பொருளைப் பங்கிடுதல் அல்லது பகிர்ந்தளித்தல் என்ற பொருளைச் சுட்டவும் எண்ணுப் பெயருக்குப்பின் 'த$^{4}$ா' ஒட்டு வரும்.

ஒன்றைப் பலவாக்குதல் அல்லது பலவற்றை யொன்றாக்குதல் என்பது 'விசால' என்ற சொல்லின் பொருள்.

ஏகம் ராஸிம் பஞ்சத$^{4}$ா குரு

'ஒரு குவியலை ஐந்து பங்காக்கு'

ஏகம் ராஸிம் அஷ்டத$^{4}$ா குரு

**5.3.44** ஏகாத்$^{3}$தோ$^{4}$ த்$^{4}$யமுஞ் அன்யதரஸ்யாம்

'ஏக' என்ற எண்ணுப் பெயருக்குப்பின் த்$^{4}$யமுஞ் (த்$^{4}$யம்)

'த$^{4}$ா'வுக்குப் பதிலியாக விருப்பாக வரும்.

ஏகத$^{4}$ா ராஸிம்குரு, அல்லது ஐகத்$^{4}$யம் குரு

**5.3.45** த்$^{3}$வி த்ர்யோஸ்$^{1}$ ச த$^{4}$முஞ்

த்$^{3}$வி (இரண்டு) த்ரி (மூன்று) என்ற எண்ணுப் பெயர்களுக்குப் பின். த$^{4}$முஞ், (த$^{4}$ம்), த$^{4}$வுக்கு விருப்பாக பதிலியாகும்.

த்$^{3}$வித$^{4}$ா, த்$^{3}$வைத$^{4}$ம்

த்ரித$^{4}$ா, த்ரைத$^{4}$ம்

வா: த$^{4}$முஞந்தாத் ஸ்வார்தே$^{2}$ ட$^{3}$த$^{3}$ாஸனம்

'த$^{4}$முஞ்'ஐ யீற்றாகக் கொண்ட சொற்களுக்குப்பின். பொருள்

மாற்றமில்லாமல், 'ட$^{3}$' ஒட்டு (இறுதி உயிர் கெட்டு) வரும். மதி த்$^{3}$வைத$^{4}$ானி ஸம்ஸ்ரயந்தே

**5.3.46** ஏத$^{4}$ாச்ச

த்$^{3}$வி, த்ரி ஆகிய எண்ணுப் பெயர்களுக்குப்பின், 'த$^{4}$ா'வுக்குப் பதிலியாக 'ஏத$^{4}$ா'வும் வரும். த்$^{3}$வேத$^{4}$ா, த்$^{3}$வைத$^{4}$ம், த்$^{3}$வித$^{4}$ா
த்ரேத$^{4}$ா, த்ரைத$^{4}$ம், த்ரித$^{4}$ா

**5.3.47** யாப்யே பாஸப் .

பாஸப் (பாஸ) என்ற ஒட்டு, 'இகழ்ச்சி அல்லது ஏளனம் என்ற பொருளைச் சுட்டுமாறு வரும்.
வையாகரண பாஸ$^{1}$: – மோசமான இலக்கணக்காரன்,
யாக்ஞிக பாஸ: கெட்ட நடத்தையுள்ள இலக்கணத்தில் சிறந்த தேர்ச்சியுள்ளவன் என்பதைச் சுட்ட இவ்வொட்டு வராது.

**5.3.48** பூரணாத்$^{3}$ ப$^{4}$ாகே$^{3}$ த்யாத் அண்

முழுமையைச் சுட்டும் 'தீய' ஒட்டை யீறாகக் கொண்ட, எண்ணுப் பெயருக்குப்பின், 'அண்' ஒட்டு, 'பகுதி' என்ற பொருளில் வரும்.
இச்சூத்திரம் சுரத்தைப் பற்றியது, 'அண்' ஒட்டு இணைப்பதால், சுரத்தில் தான் மாறுபாடு காணப்படும். அதன் வடிவத்திலல்ல. த்$^{3}$வித்ய என்ற சொல்லின் 'தீ' உதாத்த சுரம் பெறும். அச்சொல்லோடு 'அன்' ஒட்டு இணைக்கும்போது 'த்வி' உதாத்த சுரம் பெறும்.
த்$^{3}$விதீயம், 'இரண்டாவது'
'பூரண' என்ற சொல், இச்சூத்திரத்துக்குத் தேவையற்றது, ஆயினும் இச்சொல், தொடர்ந்து வரும் சூத்திரத்துக்காக இங்கு பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

**5.3.49** ப்ராக் ஏகாதஸ$^{1}$ப்$^{4}$யோ அச்ச$^{2}$ந்த$^{3}$ஸி

வேத மொழியைத் தவிர்த்த மற்ற மொழிகளில், முழுமையைச் சுட்டும் ஒட்டில் முடியும், (தனது பொருளையேயுணர்த்தும்) பதினொன்று வரையிலான எண்ணுப் பெயர்களுக்குப்பின் 'அண்' ஒட்டு வரும்.
இதுவும் சுரத்தைப் பற்றியது.
சதுர்த$^{2}$: 'ச' சுரம் பெறும் ஆனால் ஏகாத$^{3}$ஸ$^{1}$: 'ஸ' சுரம் பெறும் சுர வேறுபாடு இங்கு இல்லை.

**5.3.50** ஷஷ்ட$^{2}$ாஷ்டமாப்$^{4}$யாம் ஞ ச

மேற்கூறிய சூழலில், ஷஷ்ட$^{2}$ அஷ்ட$^{1}$ம என்ற சொற்களுக்குப்பின் 'ஞ' ஒட்டு வரும்.
ஷாஷ்ட$^{2}$: அல்லது ஷஷ்ட$^{2}$:
ஆஷ்டம: அல்லது அஷ்டம:

